ஸ்ரீஹரி: 536▲

# கீதை கற்பதன் பயன்கள்
# ஸத்யத்தைச் சரணடைவதால் முக்தி

गीता पढ़नेके लाभ, सत्यकी शरणसे मुक्ति ( तमिल )



गीताप्रेस गोरखपुर

GITA PRESS, GORAKHPUR

ஸ்ரீஜயதயால்ஜீ கோயந்தகா

# கீதை கற்பதன் பயன்கள்

# ஸத்யத்தைச் சரணடைவதால் முக்தி

## गीता पढ़नेके लाभ, सत्यकी शरणसे मुक्ति (तमिल)

*த்வமேவ மாதா ச பிதா த்வமேவ*
*த்வமேவ ப$_3$ந்து$_4$ஶ்ச ஸகா$_2$ த்வமேவ ।*
*த்வமேவ வித்$_3$யா த்$_3$ரவிணம் த்வமேவ*
*த்வமேவ ஸர்வம் மம தே$_3$வதே$_3$வ ॥*

*ஆருயிர் அன்னையும் நீயே, அருமைத் தந்தையும் நீயே,*
*உறவும் சுற்றமும் நீயே, உற்ற நண்பனும் நீயே,*
*கற்கும் கல்வியும் நீயே, சேர்க்கும் செல்வமும் நீயே,*
*அனைத்தும் ஆன என்றன் ஆதிதேவனும் நீயே!*

ஆக்கியோர்

**ஸ்ரீ ஜயதயால் கோயந்தகா**

|| ஸ்ரீஹரி: ||

# பதிப்பாளர் உரை

ஸ்ரீமத் பகவத்கீதை, அதன் பயனுள்ள நுட்பமான கருத்துக்களுக்காக நாளதுவரை உலகப்பேரறிஞர்களால் சிரமேற்கொண்டு போற்றப் பெறுகின்றது.

'அறிவினால் குறைவில்லா அகல் ஞாலத்தவர் அறிய
நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறைஞானத்து ஒரு மூர்த்தி'

என்று கீதாசார்யன் கண்ணபிரானைப் போற்றுகிறார், நம்மாழ்வார்.

சுயநலமும், உலகியற்பொருட்கள் மீது ஆதிக்க வேட்கையும் மிகுந்த சராசரி மனிதனைப் பண்படுத்தி, பயன் கருதாச் செயல்பாட்டில் [நிஷ்காம்ய கர்மத்தில்] ஈடுபடுத்தி, அவனால் உலகம் பயன்பெறச் செய்து, முடிவில் அவனை முக்திக்கு முழுத் தகுதி படைத்தவனாகவும் ஆக்கும் தகைமை பெற்ற அரிய நூல், ஸ்ரீமத் பகவத்கீதை. இக்கருத்தைத் தெளிவாக 'கீதை கற்பதன் பயன்கள்' என்ற பகுதியின் வாயிலாக விளக்குகிறார், மகாபுருஷர் பரமபூஜ்ய ஜயதயால்ஜீ கோயந்தகா அவர்கள்.

மேலும் அவர், ''நன்மையை விரும்பும் மானிடர்கள், ஸத்யத்தைத் தம் உயிரைவிட உயர்வாக மதிக்க வேண்டும்; ஸத்யத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்; முனைப்புடன் நின்று ஸத்யத்தைக் காப்பதற்கு முயல வேண்டும்; ஸத்யமே வெல்லும்!'' என்ற சீரிய கருத்தை 'ஸத்யத்தைச் சரணடைவதால் முக்தி' என்ற பகுதியின் வாயிலாக விளக்குகிறார்.

இந்நூலை வாசிப்பவர் அனைவரும் 'கீதாசார்யனின் அருளால் ஆட்கொள்ளப்பட்டு, மேன்மை உய்ய வேண்டும்' என்பதே எமது பேரவா.

— பதிப்பாளர்கள்



|| ஸ்ரீஹரி: ||

# தேவநாகரி எழுத்துக்கள் – சில குறிப்புகள்

ஒரு மொழியின் சொல்லை இன்னொரு மொழியின் எழுத்துக்களால் எழுதுவதை எழுத்துப்பெயர்ப்பு (**Transliteration**) என்று அழைக்கிறோம். ஒரு மொழியிலுள்ள சொல்லின் பொருளை மற்றொரு மொழியில் கூறுவதை மொழிபெயர்ப்பு (**Translation**) என்று அழைக்கிறோம்.

சம்ஸ்கிருதச் சொற்களைப் பிழையின்றி உச்சரிக்க, முறையாக சம்ஸ்கிருதம் கற்றவர்களிடமிருந்து அறிந்துகொள்ள முயற்சிக்க வேண்டும்.

ஆங்கில எழுத்துக்களின் துணைகொண்டு *2, 3, 4* என்னும் குறியீடுகளுடன் சம்ஸ்கிருத எழுத்துக்களுக்கு நிகரான தமிழ் ஒலி வடிவங்கள் இங்கு தரப்பட்டுள்ளன.

| | | | | |
|---|---|---|---|---|
| अ அ | आ ஆ | इ இ | ई ஈ | उ உ |
| ऊ ஊ | ऋ ரி | ॠ ரீ | ॡ ல்ரு | ए ஏ |
| ऐ ஐ | ओ ஓ | औ ஔ | | |

| | | | | |
|---|---|---|---|---|
| **क** க [ka] | **ख** க$_2$ [kka] | **ग** க$_3$ [ga] | **घ** க$_4$ [gha] | **ङ** ங |
| **च** ச [ca] | **छ** ச$_2$ [cha] | **ज** ஜ [ja] | **झ** ஜ [jha] | **ञ** ஞ |
| **ट** ட [ta] | **ठ** ட$_2$ [tta] | **ड** ட$_3$ [da] | **ढ** ட$_4$ [dda] | **ण** ண |
| **त** த [tha] | **थ** த$_2$ [thha] | **द** த$_3$ [dha] | **ध** த$_4$ [dhha] | **न** ந, ன |
| **प** ப [pa] | **फ** ப$_2$ [pha] | **ब** ப$_3$ [ba] | **भ** ப$_4$ [bha] | **म** ம |
| **य** ய | **र** ர | **ल** ல | **व** வ | |
| **स** ஸ [sa] | **ष** ஷ [sha] | **क्ष** க்ஷ [ksha] | **ह** ஹ [ha] | |
| **श** ஶ [s̄ā] | **ज्ञ** க்ஞ [gna] | **ऋ** ரு [r̲i] | | |

'**श**' என்ற எழுத்து '*ஶ*' என்று எழுத்துப்பெயர்ப்பு செய்யப் பட்டுள்ளது. இந்த '*ஶ*' என்னும் எழுத்து '*பிசகு*', '*கசடு*' என்னும் சொற்களில் வரும் '*ச*'வைப் போன்று ஒலிக்கும்.

சம்ஸ்கிருத–தமிழ் எழுத்துப்பெயர்ப்பில் (**Transliteration**) கொடுத்துள்ள எழுத்துக்கள் எழுத்துப்பெயர்ப்பில் மட்டும்

பயன்படுத்தப்பட்டுள்ளன. மொழிபெயர்ப்பில், வழக்கத்தில் உள்ள தமிழ் எழுத்துக்களே பயன்படுத்தப்பட்டுள்ளன. உதாரணமாக **'सुखं'** என்ற சொல் எழுத்துப்பெயர்ப்பில் ***'ஸுக$_2$ம்'*** என்றும், மொழிபெயர்ப்பில் ***'சுகம்'*** என்றும் எழுதப்பட்டுள்ளது.

சம்ஸ்கிருதத்தில் உள்ள உயிரெழுத்தான 'ऋ' என்பது உயிரெழுத்தாக வரும்பொழுது *'ரி'* என்றும், உயிர்மெய் எழுத்தாக வரும்பொழுது 'ரு' என்றும் உச்சரிக்கப்படுகிறது. (உ–ம்.:– **ऋषि** – *ரிஷி*, **कृत्वा** – *க்ருத்வா*) இந்த 'ரு' என்னும் எழுத்து *'எருது'*, *'விருது'* என்னும் சொற்களில் வரும் 'ரு'வைப் போன்று ஒலிக்கும்.

'ञ' என்ற எழுத்து 'ஞ' என்றும், 'ज्ञ' என்ற கூட்டெழுத்து **'க்ஞ'** என்றும் எழுத்துப்பெயர்ப்பு செய்யப்பட்டுள்ளன. 'ञ' என்ற எழுத்தில் துவங்கும் சொற்களில்லை.

ஒரு சொல்லிற்கு மேல் இருக்கின்ற புள்ளியானது *'ம்'* என்னும் எழுத்தைக் குறிக்கிறது. (உ–ம்.:– सुखं – *ஸுகம்*)

ஒரு சொல்லின் இறுதியில் மேலும் கீழும் வருகின்ற இரு புள்ளிகள் (:) ***'விஸர்கம்'*** என்று அழைக்கப்படுகிறது. இதன் உச்சரிப்பு, இதற்கு முன் வரும் எழுத்தைப் பொறுத்து அமையும். உதாரணம் பின்வருமாறு :–

| | | | | |
|---|---|---|---|---|
| **भवन्तः** | – | ப$_4$வந்த: | – | ப$_4$வந்த*ஹ* |
| **स्थितिः** | – | ஸ்தி$_2$தி: | – | ஸ்தி$_2$தி*ஹி* |
| **प्रभुः** | – | ப்ரபு$_4$: | – | ப்ரபு$_4$*ஹு* |
| **गुणैः** | – | கு$_3$ணை: | – | கு$_3$ணை*ஹி* |
| **भ्रुवोः** | – | ப்$_4$ருவோ: | – | ப்$_4$ருவோ*ஹோ* |

சம்ஸ்கிருதச் சுலோகங்களில் சில இடங்களில் 'ऽ' அல்லது 'ऽऽ' என்னும் குறியீடுகளைக் காணலாம். இதற்கு ***'அவக்$_3$ரஹம்'*** என்று பெயர். இந்த இடங்களில் முறையே ***'அ'***, ***'ஆ'*** என்னும் எழுத்துக்கள் தொக்கி நிற்கின்றன என்று பொருள் கொள்க.



॥ ஸ்ரீஹரி: ॥



யத்ர யோகே$_3$ப்வர: க்ருஷ்ணோ
யத்ர பார்தே$_2$ா த$_4$நுர்த$_4$ர: ।
தத்ர ஸ்ரீர்விஜயோ பூ$_4$திர்-
த்$_4$ருவா நீதிர்மதிர்மம ॥

*(ஸ்ரீமத் பகவத்கீதை 18/78)*

*அரசே! இங்கு நான் என்ன சொல்லப் போகிறேன்? எங்கு யோகேசுவரனான பகவான் ஸ்ரீகிருஷ்ணனும் எவ்விடத்தில் காண்டீவம் ஏந்திய அர்ஜுனனும் இருக்கிறார்களோ, அவ்விடத்தில் மகாலட்சுமியும் வெற்றியும் ஐசுவரியமும் நிலைத்த நீதியும் இருக்கும் என்பது என்னுடைய கொள்கை.*



|| ஓம் ஸ்ரீபரமாத்மநே நம: ||

# கீதை கற்பதன் பயன்கள்

ஸ்ரீமத் பகவத்கீதை ரகசியங்கள் பல நிறைந்த, மிகப்பெருமை வாய்ந்த நூலாகும். இது எம்பெருமானுடைய திருவாக்காகும். அவரது இதயத்திலிருந்து எழுந்த பாவங்களின் ஊற்று, இது. இதன் பெருமையை வார்த்தைகளால் விவரிப்பது மிகக் கடினம். எல்லையற்ற பெருமை பெற்ற இந்நூலை வர்ணிக்க யாராலும் இயலாது. ஆதிசேஷனோ, சிவபெருமானோ, கணநாதரோ, சூரியனோ (சேஷ–மகேச–கணேச–தினேசர்கள்) இதை வர்ணித்துவிட முடியாது. எனில், மனிதர்களால் இயலுமா? இதிகாச–புராணங்களில் ஆங்காங்கே கீதையின் பெருமை பகரப்படுகிறது. அவற்றையெல்லாம் ஒருங்கே திரட்டினாலும் 'கீதையின் பெருமை முழுவதும் அவற்றில் அடங்கிவிட்டது' என்று கூற இயலாது. எல்லையில்லாப் பெருமை பெற்றது ஸ்ரீமத் பகவத்கீதை!

கீதை, ஆனந்த அமுதம் ததும்பும் ஆழங்காண இயலாத பெருங்கடல். அதன் பொருளும் பாவங்களும் பரந்து விரிந்தவை; மிக ஆழ்ந்தவை. அதில் மூழ்கும் ஒவ்வொரு முறையும் மனிதன் புதிய புதிய ஆனந்த அனுபவங்கள் பெற்று, அதில் தோய்ந்தவனாய்ச் செயலிழந்து நிற்கிறான். உப்புக்கடலில் மூழ்கும் ஒருவன், நல்முத்தைப் பெறாமல் ஏமாற்றமடையலாம். ஆனால், கீதையெனும் திவ்ய ரஸாம்ருதக் கடலில் மூழ்கும் ஒவ்வொருவனும் வெறுங்கையுடன் மீள்வதில்லை. கீதையின் பொருளின்பத்தில் தோய்ந்தவன், இன்பக்கடலில் மூழ்கிய அனுபவத்தைப் பெறுகிறான். கீதையமுதின் ஒரு துளியையாவது சுவைப்பவனது ருசி, மேன்மேலும் வளர்ந்தவண்ணம் இருக்கிறது. காரணம், இது பரம ரசிக சிகாமணியாகிய சியாமசுந்தரன் வழங்கிய உள்ளங்கவரும் இன்மொழியாகும்.

கீதை அனைவராலும் மதிக்கப்படும் உலகியலுக்கு அப்பாற்பட்ட பிரமாண (சான்றான) நூலாகும். விரிவான முறையில் யோகத்தையும் பக்தியையும் ஞானத்தையும் தரும் இத்துணைச் சிறிய வடிவிலான ஒரு நூல், எம்மொழியிலும் காணக் கிடைக்காதது. இதன் மூலம் வேதங்கள் அனைத்தின் சாரமும் சுருக்கமாக உபதேசிக்கப்படுகிறது. இதன் மொழி மிகவும் இனிமையானது, எளிதானது, சுவையானது; பொருளோ மிகவும் உயர்ந்தது, மிக ரகசியமானது. உலகின் எம்மொழியிலும் இத்தகைய இனிய அறிவார்ந்த நூலைக் காண இயலாது. சிறிது இந்நூலைப் பயின்றாலும் எளிதாகப் பொருள் உணரலாம். அதன் நுண்பொருள் மிக ஆழமானது! ஆயுள் முழுவதும் தொடர்ந்து பயின்றாலும் புதிய புதிய பொருளை அறியலாம். எண்ணற்ற பாவங்கள் உதயமாகும். கீதையைப் படிக்கப் படிக்க, அது என்றும் புதியதாகவே இருப்பதை அனுபவத்தில் உணரலாம்.

கீதை அனைத்து அறங்களின் சாரத்தையும் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது. உலகின் மற்றைய ஆன்மிக நூல்களில், கீதை செய்யும் உன்னதமான, அதிநுட்பமான ஆராய்ச்சியைக் காண இயலாது. கீதைக்கு முன், மற்ற நூல்கள் புகட்டும் ஆன்மிக அறிவனைத்தும் அடிபட்டுப் போகும். கீதை பகரும் ஞானம், இன்றைய யுகத்திலும் படித்தவர்–படிக்காதவர் களுக்கும், இந்தியர்களுக்கும், வெளிநாட்டவர்களுக்கும் பொருந்தும். கீதை புகட்டும் சமத்துவமும் ஒற்றுமையும் (ஆன்மநேய ஒருமைப்பாடு) தனித்தன்மை வாய்ந்தது. வேறு நூல்களில் காண இயலாதது. கடுகைத் துளைத்து ஏழ்கடலைப் புகுத்தியது போன்று, எண்ணற்ற தத்துவ ரகசியங்களை அகப்படுத்திப் பொலியும் பாங்கு, வேறு நூல்களில் காண இயலாதது.

கீதையின் உபதேசம் மிக உயர்வானது. கீதையில் அனைத்திலும் சிறந்த ஞானம்; அனைத்திலும் சிறந்த பக்தி;

அனைத்திலும் சிறந்த நிஷ்காம பாவனை பொதிந்துள்ளன. இதன் உபதேசங்களை உணர்பவர், இந்நூல் 'மனிதரால் இயற்றப்படாதது' என்ற அதன் தனிச்சிறப்பை இதயத்தில் இயல்பாகவே உணர்ந்து கொள்வர்!

கீதை, உயர்ந்த தத்துவ நூலாகும். இது சித்தாந்த முத்துக்கொழிக்கும் பெருங்கடல்; கருத்துப்பேழை. இதைப் பயில்பவர் புதிய புதிய கருத்துக்களைப் பெறுகின்றனர். ஆர்வத்துடனும் அன்புடனும் படிப்பவர்களுக்கு மற்றைய சுவைகள் கசந்து விடுகின்றன.

கீதை, மனிதனை மிகத்தாழ்ந்த நிலையிலிருந்து உயர்த்தி, மிக உயர்ந்த நிலையான பரமபதத்தில் ஏற்றி வைக்கும் வலிமை வாய்ந்த ஒரு நூல். மனிதன் துயரத்திற்கும் ஐயத்திற்கும் ஆட்படும்போது, கீதை பகரும் நுண்பொருளிலும் பாவத்திலும் கருத்தூன்றினால், துயர் நீங்கியவனாக, ஐயம் அகன்றவனாக ஆகிறான்; ஆனந்தமும் அமைதியும் பெறுகிறான்.

கீதையின் ஒரு சுலோகத்தையோ, அதன் ஒரு பகுதியையோ பயில்பவனை உய்விக்கும் திறன் வாய்ந்தது! இத்தகைய பாக்கள் நிரம்பியது, கீதை. ஆறறிவுள்ள மனிதன் ஒவ்வொருவனும் கீதையைப் பயிலத் தகுதி உண்டு. பகவான் தாமே அருளிச் செய்கிறார்—

**யே மே மதமித$_3$ம் நித்யம்**
**அநுதிஷ்ட$_2$ந்தி மாநவா: ।**
**ஶ்ரத்$_3$த$_4$ாவந்தோऽநஸூயந்தோ**
**முச்யந்தே தேऽபி கர்மபி$_4$: ॥**

***(கீதை 3/31)***

"எந்த மனிதர்கள் குற்றங்குறை காணாதவர்களாக, சிரத்தை உடையவர்களாக, என்னுடைய இக்கொள்கையை எப்பொழுதும் பின்பற்றுகிறார்களோ, அவர்களும் அனைத்துக் கர்மங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள்."

***'மாநவா:'*** என்ற சொல்லால் கீதை தனியொரு மனிதனுக்கோ, தனியொரு இனத்திற்கோ பகரப்படவில்லை. மனிதர் எனப்படுபவர் அனைவரும் கீதையில் உரிமை பெறுகிறார் என்பதை பகவான் தெளிவுபடுத்துகிறார். ஒருவன் எந்த வர்ணம், ஆசிரமம், ஜாதி, மதம், சமுதாயம் – இவற்றைச் சார்ந்திருந்தாலும், கீதையைப் பயின்று மேன்மை பெறலாம் என்பது இதனால் தெளிவாகிறது.

ஆன்மிக நோக்கில், மானிட ஜாதி அனைத்தையும் ஆட்கொள்ளும் திறன் கொண்டது கீதை. எம்பெருமான் கண்ணபிரான் இந்து இனத்தில் அவதரித்தவர். அதனால், கீதை இந்துக்களுக்கு மட்டுமே உரியது என்று நினைக்கிறார்கள். உண்மையில் கீதை இந்துக்களுக்கு மட்டுமே உரியதன்று. கிறிஸ்தவர்கள், முகமதியர்கள் முதலிய அனைத்து மதத்தினருக்கும், மற்றும் மதநம்பிக்கை அற்றவருக்கும், பொதுவாக அனைவருக்கும் மேன்மைக்கு வழிகாட்டும் ஒளிமிகுந்த கதிரவனாகும். பாரதவாசிகள் மட்டுமின்றி, இப்பூவுலகில் உள்ள அனைவருக்கும் சேர்த்துதான் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா கீதையை உபதேசித்திருக்கிறார். மனிதர்களுக்கு மட்டுமா? தேவர்கள், கந்தர்வர்கள், யட்சர்கள், அரக்கர்கள் முதலிய ஆறறிவுள்ள அனைத்து இனத்தவருக்கும் மேன்மை தரும் களஞ்சியமாக கீதை அமைந்துள்ளது.

சிலர், கீதை துறவிகளுக்கு மட்டுமே உரியது என்று கருதுகின்றனர். இது தவறென்று நிரூபிப்போம். அர்ஜுனன் கூறுகிறார்— ''அரசுரிமையின் பொருட்டு மரியாதைக்குரிய பெரியோர்களைக் கொல்லாமல், இவ்வுலகில் பிச்சை எடுத்து உண்பதுகூட மேன்மையைத் தரும்'' (கீதை 2/5). பிச்சை பெற்று வாழ்வது சந்நியாச தர்மம்; க்ஷத்திரியர்களுக்குரிய தர்மமன்று. அர்ஜுனன் இல்லறத்தினின்றும் நீங்கித் துறவுபூண்டு, பிச்சை பெற்றுண்டு வாழ்வதை மேலானது எனக் கருதுவதையும், பின்னர் பகவான், அவரது கருத்தை

இகழ்ந்து, ''க்ஷத்திரியருக்குத் தர்ம சம்மதமானப் போரைக் காட்டிலும், வேறு ஒரு மேன்மை தரும் கடமை கிடையாது'' (கீதை 2/31) என்று கூறி, அவரை அறப்போரில் ஈடுபடுத்துவதையும் காண்கிறோம். இல்லறத்தைச் சேர்ந்த அர்ஜுனன், கீதோபதேசத்திற்குப் பின்பும், இறக்கும் வரை இல்லறத்திலேயே இருந்தார். இதிலிருந்து கீதை, 'சந்நியாசிகளுக்கு மட்டுமே உரியது' என்று முடிவாகவில்லை. துறவறம், இல்லறம் முதலான அனைத்து அறங்களிலும் உள்ளவர்களுக்கும் பொதுவானது என்றாகிறது, கீதை.

கீதா சாஸ்திரம் அனைவருக்கும் இம்மை–மறுமைக்கான நலன்களை நல்குவதால், சர்வோத்தமமான பரம தர்மமயமான நூல் என்பது தெளிவாகிறது. ஆகவே, அனைவரும் கீதையின் பொருளையும் உட்கருத்தையும் புரிந்துகொண்டு கீதையைப் பயில வேண்டும். கீதையைப் படிப்பதால் மனிதனின் உடலும் சொல்லும் மனமும் அறிவும் மேன்மையுறுகின்றன. கீதையில் ஈடுபடும் ஒருவன், இம்மையில் செல்வம், சுற்றம், வலிமை, கௌரவம், புகழ் – இவை அனைத்தையும் பெறுவதோடு, மறுமையில் மேலான பரம்பொருளையும் அடைகிறான்!

கீதையைக் கற்பது, கற்பிப்பது, மேலும் அதைப் பின்பற்றி ஒழுகுவது – இவற்றின் மூலம் முனிவர்கள் மட்டுமின்றி, அர்ஜுனன், ஸஞ்ஜயன் முதலான இல்லறத்தோர்களும் மேலான கதி பெற்றனர். கீதையினால் ஸ்ரீசங்கராசார்யர், ஸ்ரீராமாநுஜாசார்யர், ஸ்ரீஞானேஸ்வரர் முதலான சான்றோர்கள் உலகம் நிறைந்த புகழாளர்களாக வாழ்ந்து, பாரமார்த்திக வாழ்விலும் லட்சியத்தை அடைந்தனர். மகாத்மா காந்தி, லோகமான்ய திலகர் ஆகியோர் பெரும் புகழ் பெற்றனர். இச்சான்றுகளால் கீதையைக் கற்றல், கற்பித்தல், அதைக் கடைப்பிடித்தல் – இவற்றால் மனிதனுக்கு இம்மையும் மறுமையும் கிட்டும் என்று தெரிகிறது.

ஒரு மனிதன் – அவன் யாராயிருந்தாலும் இறையுணர்வும், கீதையைக் கேட்பதில் ருசியும் உள்ளவனாய் இருந்தால், அவன் கீதைக்குத் தகுதி பெறுகிறான். இத்தகுதிகள் பெற்றவனுக்கு கீதையைச் சொல்பவனும் முக்தி பெறுகிறான். அவன் இறைவனுக்கு மிகவும் இனியவன் ஆகிறான். பகவான் கூறுகிறார்—

*ய இமம் பரமம் கு$_3$ஹ்யம்*
*மத்$_3$ப$_4$க்தேஷ்வபி$_4$த$_4$ாஸ்யதி ।*
*ப$_4$க்திம் மயி பராம் க்ருத்வா*
*மாமேவைஷ்யத்யஸம்ஶய: ॥*

*(கீதை 18/68)*

“எந்த மனிதன் என்னிடம் உயர்ந்த பிரேம பக்தியைச் செய்து, இந்த உயர்ந்த ரகசியமான கீதா சாஸ்திரத்தை என்னுடைய பக்தர்களுக்குச் சொல்வானோ, அவன் என்னையே அடைகிறான். இதில் சந்தேகமில்லை.”

*ந ச தஸ்மாந்மநுஷ்யேஷு*
*கஶ்சிந்மே ப்ரியக்ருத்தம: ।*
*ப$_4$விதா ந ச மே தஸ்மாத்*
*அந்ய: ப்ரியதரோ பு$_4$வி ॥*

*(கீதை 18/69)*

“அந்த பக்தனைக் காட்டிலும் எனக்கு மிகவும் பிரியமான காரியத்தைச் செய்யக்கூடியவன், மனிதர்களில் வேறு எவனும் இல்லை. அப்படியே, பூமியில் அவனைக் காட்டிலும் எனக்கு மிகவும் பிரியமானவன் வேறொருவன் இருக்கப் போவதுமில்லை.”

இக்காரணத்தால் நாம் அனைவரும் கீதாசாஸ்திரத்தை மனமொன்றி, ஊக்கத்துடனும் பேரார்வத்துடனும் பேரன்புடனும் கற்க வேண்டும்; பிறரையும் கற்கச் செய்ய வேண்டும்.

கீதை கற்பதன் பயனையும் பெருமையையும் கண்ணபிரான்—

*அத்$_4$யேஷ்யதே ச ய இமம்*
*த$_4$ர்ம்யம் ஸம்வாத$_3$மாவயோ: ।*
*ஜ்ஞாநயஜ்ஞேந தேநாஹம்*
*இஷ்ட: ஸ்யாமிதி மே மதி: ॥*
*(கீதை 18/70)*

''எந்த மனிதன், இந்த தர்மமயமான, நம் இருவருடைய உரையாடலான கீதாசாஸ்திரத்தைக் கற்பானோ, அவனாலும் நான் ஞானவேள்வியினால் வழிபட்டவனாக ஆவேன் என்பது என்னுடைய கருத்து'' என்றன்றோ விவரிக்கிறார்.

உட்கருத்துணர்ந்து கீதை கற்றால், ஏனைய ஆன்மிக நூல்கள் பயிலத் தேவையில்லை! ஒன்றாக இருந்த வேதத்தைப் பிரித்துத் தொகுத்தளித்த ஸ்ரீவேதவியாச முனிவர் கூறுகிறார்—

*கீ$_3$தா ஸுகீ$_3$தா கர்தவ்யா*
*கிமந்யை: ஶாஸ்த்ரஸங்க்$_3$ரஹை: ।*
*யா ஸ்வயம் பத்$_3$மநாப$_4$ஸ்ய*
*முக$_2$பத்$_3$மாத்$_3$ விநி:ஸ்ருதா ॥*
*(மஹாப$_4$ாரதம் பீ$_4$ஷ்ம பர்வம் 43/1)*

''கீதையையே கருத்தூன்றி ஓத வேண்டும். அதாவது கேட்பது, கீர்த்தனம் செய்வது, கற்பது, கற்பிப்பது, மனனம் செய்வது, பொருளை மனத்தில் நிலைநிறுத்திக் கொள்வது – இவற்றைச் செய்தால் வேறு நூல்களைப் படிக்கத் தேவையில்லை. ஏனெனில், இது பகவான் பத்மநாபரது திருமுகத் தாமரையினின்றும் வெளியானதன்றோ!'' யாருடைய திருஉந்தித் தாமரை(நாபிக்கமலம்)யிலிருந்து அறநூல்கள் அனைத்துக்கும் மூலமான நான்மறைகளை ஓதும் நான்முகக் கடவுள் தோன்றினாரோ, அந்த பகவானது திருமுகத் தாமரையினின்றும் கீதை வெளியானது என்ற பொருளை வெளிக்காட்டுவதற்குத்தான் 'பத்மநாபன்' என்ற சொல்லை வேத வியாச பகவான் கையாண்டுள்ளார்! இதன் பொருள்—

உலகின் கண் எத்தனை அறநூல்கள் உண்டோ, அவை அனைத்திற்கும் சாரமானது கீதாசாஸ்திரம். இதற்குச் சான்று— ***'ஸர்வ ஶாஸ்த்ரமயீ கீ$_3$தா' (மகாபாரதம், பீஷ்ம பர்வம் 43/2)*** என்ற சொற்றொடர்.

கீதை, உலகிலுள்ள அனைத்து மதத்தவரையும் ஒரே சீராகத் தத்தம் மதங்கள் பகரும் அறத்தின்படி நடக்க, அதைக் காக்க ஆர்வமூட்டுகிறது. அது, எந்த மதத்தையும் நிந்தை செய்வதில்லை. கீதையில் எந்த இடத்திலும், எந்த மதத்திற்கும் சார்பான கருத்துக்களும் இல்லை.

கீதை, எல்லா உபநிஷத்துக்களின் சாரமானது.

***ஸர்வோபநிஷதோ$_3$ கா$_3$வோ***
***தோ$_3$க்$_3$தா$_4$ கோ$_3$பாலநந்த$_3$ந: ।***
***பார்தோ$_2$ வத்ஸ: ஸுதீ$_4$ர்போ$_4$க்தா***
***து$_3$க்$_3$த$_4$ம் கீ$_3$தாம்ருதம் மஹத் ॥***

''உபநிஷத்துக்கள் பசுக்களுக்கு நிகராகும். ஆயர்தம் செல்வச்சிறுவன் ஸ்ரீகிருஷ்ணன் பால் கறப்பவர். குந்தியின் செல்வன் அர்ஜுனன் கன்று. மேன்மை பொருந்திய கீதையே பால் ஆகும். கூர்மதியாளர்கள் கீதாம்ருதமான பாலை அருந்துகின்றனர்.''

கீதை கங்கையினும் புனிதமானது, சிறந்தது. அறநூல்கள் 'கங்கையில் நீராடினால் முக்தி' என்று பகரும். கங்கையில் நீராடியவன், தான் மட்டும் முக்தி பெறுகிறான்; மற்றவரைப் பிறவிப் பெருங்கடலினின்றும் மீட்பதில்லை. கீதையெனும் கங்கையில் மூழ்குபவன், தான் மட்டுமின்றிப் பிறரையும் பிறவிப் பெருங்கடலினின்றும் மீட்கிறான். கங்கை, பகவானது திருவடியிலிருந்து பெருகியது. ஆனால் கீதை, பகவானது திருமுகமண்டலத்திலிருந்து கிளம்பியது. கங்கையின்பாற்சென்று நீராடினால்தான் முக்தி. ஆனால், கீதையோ இல்லந்தோறும் சென்று, மனிதர்கள் முக்தி பெற வழிகாட்டுகின்றது.

கீதை, காயத்ரி மந்திரத்தைக் காட்டிலும் மேம்பட்டது. காயத்ரியை ஜபிப்பவன், தான் மட்டிலுமே முக்தி பெறுகிறான். கீதை பயில்பவன், மற்றவர்களையும் முக்தி பெறச் செய்கிறான். கீதை, பகவானைக் காட்டிலும் சிறந்தது என்று சொன்னாலும் மிகையாகாது. ஏனெனில் பகவானும்,

*கீ$_3$தாஶ்ரயேऽஹம் திஷ்ட$_2$ாமி*
*கீ$_3$தா மே சோத்தமம் க்$_3$ருஹம் ।*
*கீ$_3$தாஜ்ஞாநமுபாஶ்ரித்ய*
*த்ரீந்(ல்)லோகாந் பாலயாம்யஹம் ॥*

*(வராஹ புராணம்)*

''நான் கீதையையே புகலாகக் கொண்டு நிற்கிறேன். கீதையே எனது மேலான இருப்பிடம். கீதை தரும் ஞானத்தின் உதவியால்தான் நான் மூவுலகையும் காக்கிறேன்'' என்றருளிச் செய்தாரன்றோ!

கீதை, ஞானக் கதிரவன்; பக்தி செல்வத்தின் கருவூலம்; பயன் கருதாச் செயல்பாட்டின் (நிஷ்காம்ய கர்மம்) ஆழம் காண இயலாத கடல். கீதையில், ஞானமும் பக்தியும் நிஷ்காமபாவனையும் சொல்லப்பட்டிருக்கும் பாங்கை, மற்ற அறநூல்களில் ஒரு சேரக் காண இயலாது.

ஆன்மிக முன்னேற்றத்திற்கு கீதை மிக உயரிய நூல். அதுமட்டுமின்றி, மனிதன் எல்லாவிதத்திலும் மேன்மை அடையவும் கீதை வழிகாட்டுகிறது. உடல்நல மேம்பாட்டிற்கு கீதை சாத்விக உணவை விதிக்கிறது.

***ஆயு:ஸத்த்வப$_3$லாரோக்$_3$ய–***
***ஸுக$_2$ப்ரீதிவிவர்த$_4$நா: ।***
***ரஸ்யா: ஸ்நிக்$_3$த$_4$ா: ஸ்தி$_2$ரா ஹ்ருத்$_3$யா***
***ஆஹாரா: ஸாத்த்விகப்ரியா: ॥***

***(கீதை 17/8)***

''ஆயுள், அறிவு, வலிமை, உடல்நலம், இன்பம், அன்பு – இவற்றை வளர்க்கின்றவையாகவும், ரஸம் உள்ளவையாகவும்,

நெய்ப்புடையவையாகவும், உடலில் நீண்ட நேரம் தங்குபவையாகவும், இயல்பாகவே மனத்திற்குப் பிடித்தவை யாகவும் இருக்கக் கூடிய உணவு வகைகள் சத்துவ குணமுடையவர்களுக்கு விருப்பமானவை.''

இதன் உட்கருத்து— சாத்விக ஆகாரத்தினால் வாழ்நாள், மனம், அறிவு, வலிமை, உடல் நலம், இன்பம், அன்பு – இவை வளர்கின்றன. ஆகவே, இதற்கு எதிர்மறையான ராஜஸ, தாமஸ உணவு வகைகளை விட்டுவிட வேண்டும் என்ற கருத்தில், அவற்றைத் தடை செய்யும் நோக்கத்தில் கீதை அவற்றையும் விவரித்திருக்கிறது (கீதை 17/9,10).

உன்னதமான நடத்தையைப் பயிற்றுவிப்பதற்காக, கீதை உடலால் செய்யப்படும் தவத்தை விதிக்கிறது.

***தே$_3$வத்$_3$விஜகு$_3$ருப்ராஜ்ஞபூஜநம் ஶௌசமார்ஜவம் ।***
***ப்$_3$ரஹ்மசர்யமஹிம்ஸா ச ஶாரீரம் தப உச்யதே ॥***

***(கீதை 17/14)***

''தெய்வங்கள், அந்தணர்கள், பெரியோர்கள், ஞானிகள் – இவர்களைப் பூஜித்தல், தூய்மை, நேர்மை, பிரம்மசரியம், அகிம்சை ஆகியவை உடலால் செய்யக்கூடிய தவம் என்று சொல்லப்படுகிறது.''

வாக்கைப் பண்படுத்தி, மேன்மையுறச் செய்வதற்காக, சொல்லால் செய்யப்படும் தவம் வலியுறுத்தப்படுகிறது.

***அநுத்$_3$வேக$_3$கரம் வாக்யம்***
***ஸத்யம் ப்ரியஹிதம் ச யத் ।***
***ஸ்வாத்$_4$யாயாப்$_4$யஸநம் சைவ***
***வாங்மயம் தப உச்யதே ॥***

***(கீதை 17/15)***

''எது பிறர் மனத்தைப் புண்படுத்தாமல் இனிமையும் நலனும் அளிக்கக்கூடியதாகவும், உண்மையாகவும் இருக்குமோ, அந்தப் பேச்சும், வேத சாஸ்திரங்களை ஓதுதலும்,

பகவானுடைய நாம கீர்த்தனமும் வாக்கினால் செய்யக்கூடிய தவம் என்று கூறப்படுகிறது.''

மனத்தை மேன்மையுறச் செய்வதற்காக மானசிக தவம், கீதையில் கூறப்படுகிறது.

*மந:ப்ரஸாத$_{3}$: ஸௌம்யத்வம்*
*மௌநமாத்மவிநிக்$_{3}$ரஹ: ।*
*ப$_{4}$ாவஸம்ஶுத்$_{3}$தி$_{4}$ரித்யேதத்–*
*தபோ மாநஸமுச்யதே ॥*

*(கீதை 17/16)*

''மனமகிழ்ச்சி, அமைதியான இயல்பு, பகவானை இடைவிடாது சிந்தித்திருக்கின்ற இயல்பு, மனவடக்கம், உள்ளத்தூய்மை – இவையெல்லாம் மனத்தால் ஆற்றக்கூடிய தவம் எனப்படுகின்றன.''

சாத்விக ஞானத்தை வர்ணித்து, மெய்யறிவின் மேன்மைக்கு வழிவகுக்கிறது, கீதை.

*ஸர்வபூ$_{4}$தேஷு யேனைகம்*
*ப$_{4}$ாவமவ்யயமீக்ஷதே ।*
*அவிப$_{4}$க்தம் விப$_{4}$க்தேஷு*
*தஜ்ஜ்ஞாநம் வித்$_{3}$தி$_{4}$ ஸாத்த்விகம் ॥*

*(கீதை 18/20)*

''எந்த ஞானத்தினால் மனிதன் தனித்தனியான உயிரினங்கள் அனைத்திலும் ஒன்றேயானதும் அழிவற்றதுமான பரமாத்மாவின் இருப்பைப் பிரிவற்றதாக (எங்கும் சமமாக உள்ளதாக)ப் பார்க்கிறானோ, அந்த ஞானத்தைச் சாத்விகம் என்று அறிவாயாக.''

*ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச*
*கார்யாகார்யே ப$_{4}$யாப$_{4}$யே ।*
*ப$_{3}$ந்த$_{4}$ம் மோக்ஷம் ச யா வேத்தி*
*பு$_{3}$த்$_{3}$தி$_{4}$: ஸா பார்த$_{2}$ ஸாத்த்விகீ ॥*

*(கீதை 18/30)*

"அர்ஜுனா! எந்த புத்தி, பிரவிருத்தி–நிவிருத்தி மார்க்கத்தையும், செய்யத்தகுந்தது–செய்யத்தகாதது என்பதையும், பயம்–பயமின்மையையும், தளை–மோட்சத்தையும் உண்மையாக அறிகிறதோ, அந்த புத்தி சாத்விகமானது."

இதற்கு முரண்பட்ட ராஜஸ, தாமஸ ஞானங்களைப் பற்றி 18–ம் அத்தியாயம் 21, 22வது சுலோகங்களிலும், ராஜஸ–தாமஸ அறிவைப் பற்றி 18–ம் அத்தியாயம் 31, 32வது சுலோகங்களிலும் விவரித்து, அவற்றை விட்டொழிக்கும் அவசியத்தையும் கீதை கூறுகிறது.

தீய இயல்புகள், தீய நடத்தை, தீய விஷயங்களில் ஈடுபாடு – இவை மனிதனை மேன்மை அடையவிடாமல், பெருந்தீங்கு விளைவிப்பவை. ஆகவே, அவற்றை 'ஆஸுரி ஸம்பத்' என்று வகைப்படுத்தி, அவற்றை முற்றிலும் விட்டொழிக்கும் அவசியத்தையும் கீதை (16/4–21) வலியுறுத்துகிறது.

இது தவிர, மனிதனின் மேன்மைக்குக் காரணமான இருபத்தாறு குணங்களைக் கூறி, அவை எப்பொழுதும் கைக்கொள்ளத்தக்கவை; முக்திக்கு இட்டுச் செல்லும் படிக்கட்டுகள் என்று கூறி, அவற்றை 'தைவீ ஸம்பத்' என்று வகைப்படுத்தி இருக்கும் பாங்கையும் கீதையில் காணலாம்.

*அப₄யம் ஸத்த்வஸம்ஶுத்₃தி₄ர்–*
*ஜ்ஞாநயோக₃வ்யவஸ்தி₂தி: ।*
*தா₃நம் த₃மஶ்ச யஜ்ஞஶ்ச*
*ஸ்வாத்₄யாயஸ்தப ஆர்ஜவம் ॥*
*அஹிம்ஸா ஸத்யமக்ரோத₄ஸ்–*
*த்யாக₃: ஶாந்திரபைஶுநம் ।*
*த₃யா பூ₄தேஷ்வலோலுப்த்வம்*
*மார்த₃வம் ஹ்ரீரசாபலம் ॥*

தேஜ: க்ஷமா த்$_4$ருதி: ஶௌசம்
அத்$_3$ரோஹோ நாதிமாநிதா ।
ப$_4$வந்தி ஸம்பத$_3$ம் தை$_3$வீம்
அபி$_4$ஜாதஸ்ய பா$_4$ரத ॥

(கீதை 16/1–3)

''முற்றிலும் அச்சம் நீங்கியவனாக இருத்தல்; அந்தக்கரணம் முற்றிலும் தூய்மை பெற்றிருத்தல்; தத்துவ ஞானம் பெறுவதற்காகத் தியான யோகத்தில் இடையறாது உறுதியாக நிலைபெற்றிருத்தல்; சாத்விகமான தானம்; புலனடக்கம்; பகவான், தேவதைகள், பெரியோர்கள் ஆகியோருக்குரிய பூஜை; அக்னிஹோத்ரம் முதலிய நற்கர்மங்களைக் கடைப்பிடித்தல்; வேதங்களையும் சாஸ்திரங்களையும் கற்றல்–கற்பித்தல்; பகவானுடைய நாமகுணகீர்த்தனம் செய்தல்; ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிப்பதில் ஏற்படும் துன்பங்களைப் பொறுத்தல்; உடல்–புலன்களுடன் கூடிய அந்தக்கரணங்களின் நேர்மை; மனம், மொழி, மெய் – இவற்றால் எவர்க்கும் எவ்விதமான தீங்கும் இழையாமை; உள்ளம் அறிந்த உண்மையை இனிமையாக எடுத்துரைத்தல்; தனக்குத் தீங்கிழைத்தவரிடமும் கூடக் கோபமின்மை; கர்மங்களைச் செய்வதில் 'நான் கர்த்தா' என்ற அபிமானமின்மை; அந்தக்கரணங்களின் ஓய்வு, அதாவது அவை அலையாமல் அமைதியாக இருத்தல்; ஒருவரையும் குறை, பழி முதலியன கூறாமை; உயிரினங்களிடத்தில் இயல்பாகத் தோன்றும் பரிவு; புலன்களில் நுகர்பொருள் வந்து சேர்ந்தாலும், அவற்றில் பற்றின்றி இருத்தல்; மென்மை; உலகியல், அறநெறி ஆகியவற்றிற்குப் புறம்பான செயல்களில் வெட்கம்; வீணான செயல்களைப் புரியாதிருத்தல்; பொலிவு, பொறுமை, உறுதி (தாரணா சக்தி), புறத்தூய்மை, எவரிடமும் பகைமை பாராட்டாமை, தான் மதிக்கத்தக்கவன் என்று செருக்குக் கொள்ளாமை – இவையெல்லாம் அர்ஜுனா! தெய்விக சம்பத்துடன் (மனப்பாங்குடன்) பிறந்தவர்களின் இலக்கணங்களாகும்.''

ஆராய்ந்து பார்க்குமிடத்து, கீதை போர் புரியவே ஆணையிடுகிறது. ஆனால், விருப்பு–வெறுப்பின்றிச் சமத்துவ புத்தியுடன் செயல்பட வேண்டும் என்று கூறுகிறது. கண்ணபிரான் அர்ஜுனனிடம் கூறுவது—

*ஸுக₂து₃:கே₂ ஸமே க்ருத்வா*
*லாப₄ாலாபெ₄ள ஜயாஜயெள ।*
*ததோ யுத்₃த₄ாய யுஜ்யஸ்வ*
*நைவம் பாபமவாப்ஸ்யஸி ॥*

*(கீதை 2/38)*

''வெற்றி–தோல்விகளையும், லாப–நஷ்டங்களையும், சுக–துக்கங்களையும் சமமாகக் கருதி, அதற்குப்பின் யுத்தத்திற்குத் தயாராவாயாக. இவ்விதம் யுத்தம் செய்வதால், நீ பாவத்தை அடையமாட்டாய்.''

பகவானின் இக்கட்டளையில்தான் எத்தனை ஆழமும் உறுதியும் வீரமும் திறனும் அலௌகிகமான ஆற்றலும் நிறைந்துள்ளன!

பயனில் ஆசை, விருப்பம், †அகந்தை, ‡மமதை – இவற்றைத் துறந்து, உலக நன்மையின் நோக்கில் விதிக்கப்பட்ட கடமைகளைச் செய்வதே கீதையின் உபதேசமாகும். கீதையில் விவரிக்கப்படும் ஞானயோகம், பக்தியோகம், கர்மயோகம் ஆகிய சாதனங்கள் அனைத்திற்கும் தலையாய நோக்கம், 'அனைவரும் உயர்ந்த நன்மை பெறவேண்டும்' என்பதே. இந்த நோக்கத்தைப் புரிந்துகொண்டு தன்னலம், தற்பெருமை – இவற்றை ஒழித்து, அனைத்து உயிரினங்களிடத்திலும் தியாகம்–சமத்துவம்–பெருந்தன்மை–அன்பு–பணிவுடன் பழக வேண்டும். சாதகன் உயர்ந்த தரத்தைச் சேர்ந்தவனா? என்பதற்கு உரைகல், சமத்துவம் (கீதை 2/15,38,48). சித்தி பெற்ற ஞானிக்கும் உரைகல்

† அகந்தை – அகப்பற்று; ‡ மமதை – புறப்பற்று

சமத்துவம்தான் (கீதை 5/18,19; 6/8,9; 12/18,19; 14/24,25). செயல்களிலும் பொருட்களிலும் பாவங்களிலும் உயிரினங்களிலும் சமபாவம் என்பதே கீதையின் தலையாய உபதேசமாகும். (மக்கள் அனைவரையும் விருப்பு–வெறுப்பின்றி, தமக்கு விதிக்கப்பட்டுள்ள கர்மங்களில், சமத்துவ புத்தியுடன் ஈடுபடச் செய்வது முக்கியமான உபதேசம். இதனால் உயிரினங்கள் அனைத்தும் பெறுகின்ற உயரிய நன்மைதான் முக்கியமான லட்சியம்.)

கீதையின் அனைத்துக் கருத்துக்களும் பகுத்தறிவுக்குப் பொருந்தியவைதான். அதிக உறக்கம், அளவுக்கு மீறிய கண்விழிப்பு, அதிகமாக உண்பது, அதிக உண்ணாநோன்பு – இவற்றை விட்டொழிக்கச் சொல்கிறது, கீதை. செயல்களில் தேவைக்கு மீறிய ஈடுபாட்டைத் தடுக்கிறது, கீதை. காரணம் அளவான உண்டி, அளவான ஓய்வு – இவை இல்லையெனில், 'யோக சித்தி' ஏற்படாது. இதை வலியுறுத்தும் சுலோகம்—

***யுக்தாஹாரவிஹாரஸ்ய***
***யுக்தசேஷ்டஸ்ய கர்மஸு*** ।
***யுக்தஸ்வப்நாவபே$_3$ாத$_4$ஸ்ய***
***யோகே$_3$ா ப$_4$வதி து$_3$:க$_2$ஹா*** ॥

**(கீதை 6/17)**

"துக்கத்தைப் போக்குகின்ற யோகம் அளவோடு உண்டு நடமாடுகின்றவனுக்கும், கர்மங்களில் உரிய முயற்சி செய்கின்றவனுக்கும், அளவோடு உறங்கி விழித்திருப்பவனுக்கும் மட்டுமே கைகூடுகிறது."

கீதையில் சாத்விக, ராஜஸ, தாமஸச் செயல்கள், எண்ணங்கள் மற்றும் பொருட்களின் விவரம் கூறப்பட்டிருக்கிறது. சாத்விகமானவற்றை ஏற்று, மற்றவைகளைத் துறக்க வேண்டும்.

மேலான நடத்தை, அந்தக்கரணங்களின் உயரிய நோக்கம் இரண்டையும் 'ஆன்மிக உயர்வுக்கான காரணங்கள்' என்று

கீதையில் கூறியிருந்தாலும், பாவங்களுக்கே முதன்மை தரப்பட்டுள்ளது.

இவ்விதம் ரகசியம் நிறைந்த உயர்ந்த கருத்துக்கள் கீதையில் நிரம்பியுள்ளன. மேன்மைகள் யாவும் அமையப் பெற்ற இத்தகைய நூலை, நமது வாழ்நாளில் கற்கவும் கேட்கவும் பெறுவதற்கு, நாம் பெறும்பேறு செய்திருக்கிறோம். இந்த நல்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு கீதையுடன் ஒன்றி, அன்போடும் ஆர்வத்தோடும் அதைப் பயில வேண்டும்.

கீதை கற்பவர்கள், அதை திரும்பத் திரும்பப் படிக்க வேண்டும். அந்தரங்கத்தில் பதியச் செய்து கொள்ளவேண்டும். ஒவ்வொரு சொல்லும் உட்புலன்களுள் புகும் வரை மனனம் செய்ய வேண்டும். பகவானைச் சரண் புகுந்து, இவ்வண்ணம் கீதையைக் கற்றால், ஐயன் திருவருளினால் கீதையின் தத்துவ ரகசியங்கள் எளிதில் புரியும். பிறகு, கீதை கற்பவரது சிந்தனைகளும் குணநலன்களும் செயல்பாடுகளும் கீதையை ஒட்டியே அமைந்துவிடும். கீதை சார்ந்த நடத்தையினால் மனிதனுக்கு ஆன்ம பலம், அறிவு, பொலிவு, தத்துவ ஞானம், வாழ்நாள், புகழ் – இவை மேன்மையுறும். இது மட்டுமின்றிப் பரமபத ஸ்வரூபமான பகவானையும் முடிவில் பெறலாம்.

**॥ ஓம் தத் ஸத் ॥**



|| ஸ்ரீஹரி: ||

# ஸத்யத்தைச் சரணடைவதால் முக்தி

'ஸத்' என்ற சொல் பொருட்செறிவு மிக்கது. உண்மையில் 'ஸத்' என்ற சொல்லைப் பற்றி ஆராய்ந்தால், இது பரமாத்மாவின் வடிவத்தைக் குறிப்பிடுகின்றது என்பது புலப்படும். 'ஸத்' என்பதன் தத்துவத்தை அறிபவன், பரமாத்மாவையே அறிகிறான்.

எது 'ஸத்யமோ' அது எப்பொழுதும் இருக்கக்கூடியது; அமுதமயமானது. இந்தத் தத்துவத்தை அறிந்தவன் மரணத்தை வெல்கிறான். சோகம், மோகம் – இவற்றைக் கடந்து, பயமே இல்லாத நித்யமான பரமாத்மாவின் ஸ்தானத்தை அடைகிறான். அவன், எப்பொழுதுமே பயமற்ற நித்யமான நிலையை அடைகிறான்.

அவன், எப்பொழுதுமே அமிர்தமயமான நிலையில் விளங்குகிறான். அவனைத்தான் இவ்வுலகில் ஜீவன்முக்தன், ஞானி, மகாத்மா முதலிய பெயர்களால் அழைக்கிறார்கள். அவனுக்கு எல்லாவற்றிலும் சமபுத்தி ஏற்படும். ஏனெனில், 'ஸத்'தாகிய பரமாத்மா, எல்லோரிடமும் சமமாக இருப்பவர். அவன் 'ஸத்' என்ற பரம்பொருளில் லயித்து இருப்பவன். ஆகவே, அவனிடம் ஏற்றத்தாழ்வு என்ற குற்றம் காண முடியாது. அவன் ஒருபொழுதும் பொய் பேச மாட்டான். மனம்–மொழி–மெய்களால் அவன் செய்யும் செயல் எதுவும் அஸத்யமாக இல்லாததால், அவனுடைய ஒவ்வொரு நடைமுறையும் ஸத்யம் என்று கருதப்படுகிறது. அவன் எதைக் கடைப்பிடிக்கிறானோ, அதுவே உலகில் பிரமாணமாக (சான்றாக)க் கருதப்படுகிறது.

***யத்$_3$யத$_3$ாசரதி ஶ்ரேஷ்ட$_2$ஸ்தத்ததே$_3$வேதரோ ஜந: ।***
***ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்தத$_3$நுவர்ததே ॥***

***(கீதை 3/21)***

''உயர்ந்த மனிதன் எதை எதைச் செய்கிறானோ, ஏனையோரும் அதை அதையே செய்வர். அவன் எதைச் சான்றாக எடுத்துக்காட்டுகிறானோ, மனித சமுதாயம் அனைத்தும் அதையே பின்பற்றி நடக்கிறது.''

இத்தகைய மனிதனின் உள்ளம், உடல், புலன்கள் எல்லாம் ஸத்யத்தால் நிறைந்து இருக்கின்றன. அவனுடைய உணவு, பேச்சு, நடத்தை முதலியவற்றிலும் 'ஸத்யம்' கண்கூடாக உருவமெடுத்து விளங்குகிறது. இத்தகைய மாந்தருள் மாணிக்கத்தின் பிறப்பால், உலகே பெரும்பேறடைகிறது. ஆகவே நாம், இதை நன்கு உணர்ந்து, ஸத்யத்தைச் சரண் அடைய வேண்டும். அதாவது, அதை நாம் நன்கு உறுதியாகக் கடைப்பிடிக்க வேண்டும்.

## ஸத்யத்தின் வடிவம்

எந்தப் பொருள் எக்காலத்திலும் பாதிக்கப்படுவது இல்லையோ, அதுவே ஸத்யமாகும். அது எப்பொழுதும் ஒரே தன்மை உடையது. எப்பொழுதும் எல்லா இடங்களிலும் சமபாவத்துடன் இருப்பது. அது தனக்குத் தானே பிரமாணமாக (சான்றாக) உள்ளது.

***நாஸதோ வித்$_3$யதே ப$_4$ாவோ***
***நாப$_4$ாவோ வித்$_3$யதே ஸத: ।***
***உப$_4$யோரபி த்$_3$ருஷ்டோSந்தஸ்–***
***த்வநயோஸ்தத்த்வத$_3$ர்ஶிபி$_4$: ॥***

***(கீதை 2/16)***

''இல்லாததற்கு இருப்பு என்பது இல்லை. மேலும், உண்மையாக இருப்பதற்கு இல்லாமை என்பதும் இல்லை. இந்த இரண்டின் தத்துவமும் தத்துவஞானிகளால் கண்டறியப்பட்டது.''

இவ்வாறு 'ஸத்யம்' என்பது ஒன்றேயாகவும், அறிவு வடிவாகவும், ஆனந்தமே நிரம்பியதாகவும் உள்ள 'பரமாத்மாவே' என்று வேதமும் சொல்கிறது.

*'ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்$_3$ரஹ்ம ।' (தைத்திரீயம் 2/1)*

(பரமாத்மா, ஸத்யமாயும் அறிவுமயமாயும் எல்லையற்றும் இருப்பவர்.)

*'மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூ$_4$த: ஸநாதந: ।'*
*(கீதை 15/7)*

ஜீவாத்மா என்பவனும் 'ஸத்' என்ற பொருளே. பரமாத்மாவின் அம்சம்தான் 'ஜீவாத்மா' என்பதால், அவனையும் 'எக்காலத்திலும் உள்ளவன்' என்றும், 'நிலை பெற்றுள்ளவன்' என்றும் கீதை கூறுகிறது.

கீதையின் இரண்டாவது அத்தியாயம் 17/21, 23/25வது சுலோகங்களில் இந்த விஷயத்தைப் பற்றிய வர்ணனை உள்ளது. அதனால்தான் முக்காலத்திலும் இருப்பவனும், வெளிப்படையாகத் தோன்றாதவனும், ஸத்ய வடிவமாய் உள்ளவனுமான பரமாத்மாவைச் சரணடைந்தால், இந்த ஜீவன் மாயையை வென்று, ஸத்ய வடிவமாயுள்ள பரமாத்மாவை அடைந்துவிடுவான்.

அறிவு மயமாயும், ஆனந்தம் நிறைந்துமுள்ள பரமாத்மா ஸத்யமானவர். அதனால், அவருடைய பெயரும் 'ஸத்' என்று கூறப்படுகிறது. ஏனெனில், உருவத்திற்கு ஏற்றபடிதான் பெயர் உண்டாகிறது. இது உலகில் நன்கு அறியப்பட்டதே ஆகும்.

*ஓம் தத்ஸதி$_3$தி நிர்தே$_3$ஶோ*
*ப்$_3$ரஹ்மணஸ்த்ரிவித$_4$: ஸ்ம்ருத: ।*
*(கீதை 17/23)*

'ஓம்', 'தத்', 'ஸத்' என்ற இந்த மூன்றுவிதமாக ஸத் சித் ஆனந்தமயமான பிரம்மத்தினுடைய (பரமாத்மா) பெயர் மொழியப்பட்டுள்ளன. 'ஸத்' என்ற சொல் ஒரு பொருளின் 'இருப்பை'க் குறிப்பிடுகிறது. உலகில் எந்தப் பொருளை 'இருக்கிறது' என்கிறோமோ, அது 'ஸத்' என்ற பொருளின் ஆதாரத்தில்தான் இருக்கிறது. ஆகையால், எல்லா உலகத்திற்கும்

ஆதாரம் ஸத்யமே! சூரியன், சந்திரன், காற்று, பூமி முதலிய எல்லாப் பொருட்களும் ஸத்யத்தையே நிலையாகக் கொண்டுள்ளன. ஸத்யத்தின் ஆதாரத்தில்தான் கதிரவன் ஒளிர்கிறான்; காற்று வீசுகிறது. ஸத்யத்தின் சம்பந்தம் இல்லையேல், எந்தப் பொருளையும் 'இருக்கிறது' என்று சொல்வதற்கில்லை. ஸத்யம் பரமாத்மாவின் வடிவம்!

பரமாத்மா எல்லாவற்றையும் விடச் சிறந்தவர். அதாவது மேலானவர். ஆகவே, சிறந்த குணம், மேலான செயல், தூய எண்ணம் – இவற்றிலும் 'ஸத்' என்ற சொல்லை உபயோகிக்கிறோம். அதாவது, சிறந்த குணமும் நற்செய்கையும் அல்லது உயர்ந்த எண்ணமும் 'ஸத் குணம்' என்றும், 'ஸத்கர்மம்' என்றும், 'ஸத்பாவம்' என்றும், 'ஸத்' என்ற சொல்லைச் சேர்த்தே உபயோகிக்கிறோம். இந்த முறை சாஸ்திரங்களில் காணக் கிடைக்கிறது.

*ஸத்$_3$ப$_4$ாவே ஸாது$_4$ப$_4$ாவே ச*
*ஸதி$_3$த்யேதத்ப்ரயுஜ்யதே ।*
*ப்ரஶஸ்தே கர்மணி தத$_2$ா*
*ஸச்ச$_2$ப்$_3$த$_3$: பார்த$_2$ யுஜ்யதே ॥*

***(கீதை 17/26)***

" 'ஸத்' என்ற பகவானுடைய பெயர் உண்மை என்ற கருத்திலும், நல்லெண்ணம் என்ற கருத்திலும் உபயோகப் படுத்தப்படுகிறது. அங்ஙனமே, அர்ஜுனா! உயர்ந்த மங்களமான கர்மத்திலும் 'ஸத்' என்ற சொல் உபயோகிக்கப்படுகிறது."

சிறந்த செயல்கள் என்ற காரணத்தால் யாகம், தானம், தவம் முதலியவை 'ஸத் கர்மம்' என்ற சொல்லால் நன்கு அறியப்படுகின்றன; புகழ் பெறுகின்றன. அவ்வாறே, இவற்றில் எது உறுதியாக இருக்கிறதோ, இருப்பாக இருக்கிறதோ, அதையும் 'ஸத்'தாக இருக்கிறது என்று சொல்கிறோம். சுயநலத்தைவிட்டு, ஸத்ய வடிவமான பரமாத்மாவிற்காக செய்யப்படுகின்ற ஒவ்வொரு செயலும்,

உலகிலும் சாஸ்திரத்திலும் 'ஸத் கர்மம்' என்ற சொல்லாலே அழைக்கப்படுகிறது.

> *யஜ்ஞே தபஸி த$_3$ாநே ச*
> *ஸ்தி$_2$தி: ஸதி$_3$தி சோச்யதே ।*
> *கர்ம சைவ தத$_3$ர்தீ$_2$யம்*
> *ஸதி$_3$த்யேவாபி$_4$தீ$_4$யதே ॥*
>
> *(கீதை 17/27)*

''வேள்வியிலும் தவத்திலும் தானத்திலும் எந்த உறுதிநிலை இருக்கிறதோ, அதுகூட 'ஸத்' என்றே கூறப்படுகிறது. மேலும், பரமாத்மாவின் பொருட்டுச் செய்யப்படுகின்ற அந்தச் செயல், நிச்சயமாக 'ஸத்' என்றே அழைக்கப்படுகிறது.''

நாம் ஆராய்ந்து பார்த்தால், யுக்திக்குப் பொருந்தும் பொருள் ஒன்று கிடைக்கிறது. ஸத்யத்திற்காக எந்தச் செயல் செய்யப்படுகிறதோ, அதுவே ஸத்யமாகக் கருதப்படுகிறது. ஆகவே, ஸத்யத்திற்காகச் செயலாற்றுபவனுடைய மனம்–மொழி–மெய்களால் செய்யப்படும் செயல்கள் அனைத்தும் ஸத்யமாகவே ஆகின்றன. அதாவது, அவையெல்லாம் உலகில் ஸத்யத்திற்குப் பிரமாணமாகக் கருதப்படுகின்றன.

## ஸத்யமான பேச்சு

கபடம், சொல், திறமை, சூழ்ச்சி – இவற்றை நீக்கி, பிறரைத் துன்புறுத்தாத வகையில் எளிமையுடன், உண்மையில் எவ்வாறு கண்டோமோ, கேட்டோமோ, அறிந்தோமோ, அவ்வாறே குறைக்காமலும் கூட்டாமலும் சொல்வது ஸத்யமான பேச்சாகும். ஸத்யம் பேச விரும்புவர்கள் கீழ்க்கண்ட விஷயங்களில் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும்.

1) தான் எப்பொழுதும் பொய் பேசாதிருப்பதோடு அன்றி, பிறரையும் பொய் பேசத் தூண்டக்கூடாது. தூண்டுதல் மூலமோ, வற்புறுத்தல் மூலமோ பிறரைப் பொய் பேச வைப்பவன், மிகப்பெரிய பொய்யன். ஏனெனில், இவனால்

பொய்யின் பிரசாரம் அதிகமாகிறது. ஆகவே, பொய் பேசுபவனுக்கு நாம் உடந்தையாக இருக்கக் கூடாது. அச்சமயத்தில் பேசாமல் இருப்பதுகூட ஒருவிதத்தில் பொய் பேசியதாகக் கருதப்படும். தான் செய்வது அல்லது பிறரைச் செய்யத் தூண்டுவது, பிறர் செய்வதை ஒப்புக் கொள்வது – இவற்றில் எந்தவிதமான பொய்க்கலப்பும் இருக்கக்கூடாது என்பதே.

2) முடிந்த வரையில் பிறரை இகழ்வதோ, புகழ்வதோ கூடாது. பிறரை இகழ்பவன் அல்லது புகழ்பவன், தன்னலம், காமம், கோபம், பேராசை, மதிமயக்கம், பயம், மனக்கொந்தளிப்பு முதலியவற்றுக்கு அடிமையாகிறான். அவன் உணர்ச்சிவசப்பட்டு குறைவாகவோ–அதிகமாகவோ, புகழ்வதிலோ–இகழ்வதிலோ ஈடுபட்டுவிடுகிறான். இதில் பிறரை இகழ்வது முற்றிலும் விலக்கத்தக்கது. உயர்ந்த தகுதியைப் பெற்றிருப்பவரைப் புகழ நேரிடும் சமயத்திலும் அதிகமான கவனத்துடன் பேச வேண்டும்.

ஏனெனில், ஒருவன் புகழ்ச்சிக்கான சிறந்த தகுதி பெற்றவனாக இருக்கலாம். நாம், அவனுடைய தகுதியைக் குறைக்கும்படி புகழ்ந்துவிட்டோமானால், அந்த புகழ்ச்சி வேறுவிதத்தில் இகழ்ச்சிக்கு நிகராக ஆகிவிடும்.

ஒருவன் புகழ்ச்சிக்கான தகுதியில் குறைவுள்ளவனாக இருக்கலாம். நாம் அவனை அதிகமாகப் புகழ்ந்துவிட்டால், அது மக்களிடத்தில் ஒரு குழப்பத்தை ஏற்படுத்தும். அது நன்மையை ஏற்படுத்துவதற்குப் பதிலாகத் தீமையை விளைவிக்கலாம்.

இவ்வாறு பொய்யான புகழ்ச்சியால் புகழ்பவர், புகழப்படுபவர் ஆகிய இருவருக்குமே, நன்மைக்குப் பதிலாக தீமைதான் ஏற்படுகிறது. ஆனால், ஏதாவது ஒரு விஷயத்தைப் பற்றித் தீர்மானிப்பதற்காக நீதிமன்றத்திலோ, பஞ்சாயத்திலோ ஸத்யமான நிலையைக் கூறினால், அதற்கு ‘நிந்தை’ என்றோ, ‘ஸ்துதி’ என்றோ பெயர் கிடையாது. அக்கூற்றில் யாரையாவது

இகழ்வதாகவோ, புகழ்வதாகவோ வார்த்தை இருந்தாலும், சொல்பவருடைய நோக்கத்தில் தூய்மை உள்ளதால், புகழ்ச்சியென்றோ, இகழ்ச்சியென்றோ கருதப்பட மாட்டாது. ஒரு மனிதன், தன்னுடைய குற்றத்தைத் தெரிந்து கொள்வதற்காக வற்புறுத்தினால், அவனிடம் அன்பு ததும்ப, அமைதியுடன் அவனுடைய குற்றத்தை உள்ளவாறு எடுத்துரைப்பது நிந்தையாகாது.

3) கூடுமானவரை எதிர்காலத்தைக் குறிக்கும் வினைச்சொற்களைப் பேச்சில் உபயோகிக்காமல் இருப்பது நல்லது. ஏனெனில், நான் 'இதைச் செய்வேன், அதைச் செய்வேன்' என்ற எதிர்கால வினைகளை உபயோகித்து விட்டால், நாம் சொன்னதை முழுமையாக நிறைவேற்றுவது கடினமல்லவா? ஆகவே, நாம் கூறும் ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு நிலையிலும் பொய்த்துப் போக வாய்ப்பு இருக்கிறது. உதாரணமாக, 'நான் நாளை கட்டாயமாகத் தங்களைச் சந்திக்கிறேன்' என்று ஒருவன் சொல்வதாக வைத்துக் கொள்வோம். ஆனால், அவன் ஏதோ ஒரு காரணத்தால், அவனைச் சந்திக்க முடியாமல் போய்விட்டால், அவன் அவனுக்குக் கொடுத்த வாக்குறுதி பொய்யானதாகத் தானே கருதப்படும். ஆகவே, இம்மாதிரியான சந்தர்ப்பங்களில், 'நான் நாளை உங்கள் வீட்டிற்கு வரலாமென நினைக்கிறேன் அல்லது விரும்புகிறேன்' என்று சொல்வது உகந்ததாக இருக்கும்.

4) எவருக்கும் வரம் கொடுப்பதோ, எவரையும் சாபமிடுவதோ கூடாது. இதனால் தவம் குறைகிறது. சாபம் கொடுத்தால் நாமும் பாவத்தின் பங்காளிகள் ஆவோம். இதுபோன்ற தீய பழக்கத்தால் சுபாவம் கெட்டுவிட்டால் ஸத்யத்திற்குக் குறைவு ஏற்படுகிறது. ஆன்மாவின் வீழ்ச்சி ஏற்படுகிறது.

5) நாம் எவருடனும் கேலியாகப் பேசுவது, பரிகசித்துப் பேசுவது கூடாது. ஏனெனில், இதில் வேடிக்கையாக பொய்யான

சொற்கள் இடம் பெறுகின்றன. கேலிக்கு ஆளாகும் மனிதருக்கு நாம் உபயோகிக்கும் சொற்கள் பிடிக்காவிட்டால், அவன் மனத்தில் துன்பம் உண்டாகும். அதனால் 'பிறர் மனத்தை நோகச் செய்தல்' (இம்சை) என்ற குற்றமும் நேரக்கூடும்.

6) மறைத்தும், கண் ஜாடை செய்தும் பேசுவது கூடாது. இவற்றிலும் பொய், கபடம், இம்சை என்ற குற்றங்கள் இணைந்திருக்கக் கூடும்.

7) சாதுர்யமான வார்த்தைகளைக் கையாளக்கூடாது. அதாவது, சொற்களில் பேச்சு ஸத்யமாக இருந்தாலும், அதன் உள்நோக்கம் விபரீதமாக இருக்கும். ராஜா தர்மபுத்திரர், தமது குருபுத்திரனான அசுவத்தாமா கொல்லப்பட்டதைப் போல், அசுவத்தாமா என்ற யானையின் மரணத்தையும் இணைத்துச் சொன்னார். இதைத்தான் சாதுர்யமான சொல் என்கிறோம். இதுவும் 'பொய்யான சொல்' என்றே கருதப்பட்டது.

8) குறைவாகப் பேசுவது சாலச்சிறந்தது. அதாவது, ஆழ்ந்து யோசித்து மிகக் குறைவாகப் பேசுவது நன்று. ஏனெனில், அதிகமான சொற்களைக் கையாளும்போது, நன்கு ஆராய்ச்சி செய்வதற்கு நேரம் கிடைக்காத காரணத்தால், தவறுதலாக பொய்யான சொற்களைப் பயன்படுத்த நேரலாம்.

ஸத்யத்தைக் கடைப்பிடிக்கும் மனிதன், காமம், கோபம், பேராசை, மதிமயக்கம், பயம், பகைமை, பொறாமை, வெறுப்பு, பாசம் முதலான குறைகளற்ற சொற்களைப் பேச முயல வேண்டும். ஸத்யத்தில் எப்பொழுது நிலைத்து நிற்கிறோமோ, அப்பொழுது மேலே குறிப்பிட்ட குறைகள் அநேகமாக அழிந்துவிடுகின்றன. இவற்றில் ஏதேனும் ஒரு குற்றத்தின் காரணமாகக்கூட மனிதன், ஸத்யத்திலிருந்து நழுவிவிடுகிறான். பிறகு, அவன் பல குற்றங்களுக்கும் ஆளாகிப் பொய்யையே பேசுவான் என்பதில் வியப்பு என்ன?

ஆகவே, ஸத்யத்தைக் கடைப்பிடிக்கும் மனிதன் இம்சை, கபடம் முதலியவை பற்றி மிக விழிப்புடன் இருக்கவேண்டும்.

ஒருவன் பேசுவது ஸத்யமாக இருந்தாலும், அதனால் பிறருக்குத் தீமை அல்லது இம்சை ஏற்படுமானால், அவன் பேசிய உண்மையும் ஸத்யம் ஆகாது. இது விஷயமாக மகாபாரதம், கர்ண பர்வத்தில் 69வது அத்தியாயத்தில் சொல்லப்பட்ட கௌசிகரின் வரலாறு புகழ் பெற்றது. இதுபோன்ற சந்தர்ப்பத்தில் ஸத்யத்தைச் சொல்வதைவிட, மௌனமாக இருப்பதோ அல்லது சொல்லாமல் இருப்பதோ ஸத்யமாகும். ஆம், தன்னுடைய அல்லது பிறருடைய உயிரைக் காப்பதற்காகப் பொய் சொல்லும் நிலையில், அது ஸத்யம் என்று கருதப்படாவிட்டாலும், பாவமில்லை என்று ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது.

எந்த ஸத்யத்தில் கபடம் உள்ளதோ, அந்த ஸத்யம் 'ஸத்யம்' எனக் கருதப்படமாட்டாது. உண்மையை உரைக்கும் மனிதனும், உண்மையை எந்த அளவு சொல் வடிவிலோ, பொருள் வடிவிலோ மறைக்கிறானோ, அந்த அளவு திருடனாகிறான். பிறரை இம்சித்தல், கபடம் – இவ்விரண்டும் ஸத்யத்திற்கு மாசு ஏற்படுத்தக் கூடிய களங்கங்களே. ஆகையால், எந்த உண்மையில் இம்சையோ, கபடமோ சிறிதளவேனும் இருக்கிறதோ, அந்த உண்மை, சொல்லளவில் உண்மையாக இருந்தாலும் பொய்யாகவே கருதப்படும்.

விஷய போகங்களில் ஈடுபாடு கொண்டவர்களும், அறிவிலிகளும் காரணமில்லாமலே கவனமின்றிப் பொய் பேசிவிடுகிறார்கள். ஏனெனில், அவர்கள் உண்மையின் உட்கருத்தையோ, பெருமையையோ சிறிதும் அறிந்தவர்களல்லர். எனவே, அவர்களுடைய வீழ்ச்சியும் இயற்கையானதே. ஆனால், ஸத்யத்தை 'உயர்ந்தது' என்று எண்ணி, அதைக் காப்பதில் விருப்பமுடையவர்கள் கூட, ஸத்யத்தை முழுமையாகக் கடைப்பிடிப்பது கடினம்தான். ஏனெனில், எண்ணற்ற பிறவிகளில் பொய் சொல்லிப் பழக்கமிருப்பதால், அவர்களுக்கும் ஸத்ய நெறி கைகூடுதல் கடினமே. ஆனால், பகுத்தறிவின் மூலம்

தன்னலத்தை விட்டு, ஸத்யத்தைக் கடைப்பிடிக்கச் சிறப்பாக முயல்பவர்களுக்கு ஸத்யத்தைக் காப்பதோ, ஸத்யத்தில் உறுதியை அடைவதோ சாத்தியமே, முடியாததன்று. எவன் உண்மையைக் கடைப்பிடிக்க நன்கு பயிற்சி செய்கிறானோ, அதாவது ஸத்யத்தை எல்லாவிதத்திலும் நிலைநாட்ட உறுதியுள்ளவனோ, அவனுடைய சொல் ஸத்யமாகிறது. அவன் எது சொல்கிறானோ, அது ஸத்யமாகிறது. பதஞ்ஜலி முனிவர் இரண்டாம் யோகபாதம், 36வது சூத்திரத்தில் கூறுகிறார்—

***'ஸத்யப்ரதிஷ்ட$_2$ாயாம் க்ரியாப$_2$லாஶ்ரயத்வம் ॥'***

''ஸத்யம் நிலைநாட்டப்பட்டால், மனிதனுடைய செய்கை, பயன் எல்லாம் அதை அண்டியிருக்கும்.''

அகஸ்தியருடைய வார்த்தையால், நஹுஷன் வீழ்ச்சி அடைந்தது போன்ற பல கதைகள் சாஸ்திரங்களில் பிரசித்தமானதே.

உண்மை பேசும் மனிதன் அச்சமற்றவனாகிறான். ஏனெனில், மனிதனுக்கு பயம் விலகாமல் இருக்கும்வரை அவன் ஸத்யம் பேசுபவனாக இருக்க மாட்டான். பயத்தின் காரணமாக எங்கேயாகிலும் பொய் சொல்ல நேரிடும். எவன் முற்றிலும் ஸத்யத்தைக் கைக்கொண்டவனோ, அவன் பொறுமை உள்ளவனாக ஆகிறான். அவனைக் கோபம் தன்வயப்படுத்த முடியாது. கோபமுள்ளவன், ஸத்யத்தைக் கடைப்பிடிக்க முற்றிலும் தகுதியற்றவன். கோபவெறியில் மனிதன் எதைத்தான் உளறிக் கொட்ட மாட்டான்?

ஸத்யத்தைக் கடைப்பிடிப்பதால், அதன் பெருமை காரணமாக மனிதனுக்குச் செருக்கற்ற தன்மை வந்து அமைகிறது. மரியாதை, புகழ் – இவற்றில் நோக்கம் உள்ளவனிடம், மதமும் கபடமும் குடியேறுகின்றன. இவைகள் வந்தவுடன் ஸத்யம் அந்நொடியிலேயே அழிந்து விடுகிறது. இவைகள் உள்ளவன் ஸத்யத்திலிருந்து வீழ்வது தவிர்க்க முடியாதது.

எப்பொழுது ஸத்யம் முற்றிலுமாக நிலைநாட்டப்படுகிறதோ, அப்பொழுது அந்த ஸத்யவாதிக்கு எந்தவிதமான விருப்பமோ, ஆசையோ இருப்பதில்லை. இன்பங்களை விரும்பும் மனிதன், அந்தோ! என்னென்ன அனர்த்தங்களைச் செய்து விடுகிறான்! ஏனெனில், காமம் பல பாவச் செயல்களுக்குக் காரணம். ஆதலால், காமவசப்பட்ட மனிதன் பொய், கபடம், வஞ்சனை முதலிய குற்றங்களின் இருப்பிடமாகி விடுகிறான். ஆகையால், தான் ஸத்யத்தைச் செவ்வனே கடைப்பிடிக்கும் மனிதனுடைய காமம், கோபம், பேராசை, மதிமயக்கம், பொறாமை, செருக்கு முதலிய குற்றங்கள் நாசமடைகின்றன. அந்த மனிதன், ஸத்யம் ஒன்றைக் கடைப்பிடிப்பதாலேயே அமைதி, பொறுமை, சமத்துவ பாவனை, அச்சமின்மை முதலிய எல்லா நற்குணங்களுக்கும் கருவூலமாக ஆகிவிடுகிறான். ஆகவே, ஒவ்வொரு மனிதனும், உண்மையை உரைப்பதில் தீவிரமாக ஈடுபட்டு, அதைக் கடைப்பிடிப்பதில் சிறப்பான முயற்சி செய்ய வேண்டும்.

## உண்மையான உணவு

அந்தணன், க்ஷத்திரியன், வணிகன், மற்றவன் – இவர்களில் யாராக இருந்தாலும் சரி, சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ள விதிமுறைப்படி நியாயமாக, தன் உழைப்பால் பெறப்பட்ட பொருட்கள் மூலம் எந்த சாத்விகமான† உணவை

---

† *ஆயு:ஸத்த்வப$_3$லாரோக்$_3$ய–*
*ஸு$_2$க$_2$ப்ரீதிவிவர்த$_4$நா:* ।
*ரஸ்யா: ஸ்நிக்$_3$த$_4$ா: ஸ்தி$_2$ரா ஹ்ருத்$_3$யா*
*ஆஹாரா: ஸாத்த்விகப்ரியா:* ॥

***(கீதை 17/8)***

ஆயுள், அறிவு, வலிமை, உடல்நலம், இன்பம், அன்பு – இவற்றை வளர்க்கின்றவையாகவும், ரஸம் உள்ளவையாகவும், நெய்ப்புடையவையாகவும், உடலில் நீண்ட நேரம் தங்குபவையாகவும், இயல்பாகவே மனத்திற்குப் பிடித்தவையாகவும் இருக்கக் கூடிய உணவு வகைகள் சத்துவ குணமுடையவர்களுக்கு விருப்பமானவை.

உட்கொள்கிறானோ, அதுவே 'உண்மையான உணவு' (ஸத்ய ஆகாரம்) என்று சொல்லப்படுகிறது. அந்தணன், தானம் வாங்கியும் தன் வாழ்நாளைக் கழிக்கலாம். அது சாஸ்திர சம்மதமே என்று சொல்லப்பட்டாலும், கொடுப்பவனுக்கு எந்தவித உபகாரமும் செய்யாமல், தன் தர்மம் என்று எண்ணி, யாசித்தல் மூலமாகவே எவன் தன் வாழ்க்கையை நடத்துகிறானோ, அவன் அந்தணர்களில் இகழத்தக்கவன். அதனால், அவனது தவ வலிமை குறையும். சோம்பேறித்தனமும், வேலை செய்யாமல் சோம்பி இருக்கும் குணமும் ஏற்படுகின்றன. ஆகவே, சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ளது என்றாலும்கூட, இவ்வாறு வாழ்பவனுடைய உணவும் ஸத்ய உணவென்று சொல்லப்பட மாட்டாது. ஆகவே, தானம் கொடுப்பவனுக்கும் ஏதாவது பதிலுதவி செய்தோ, உஞ்சவிருத்தி செய்தோ, அந்தணன் தன் வாழ்க்கையைக் கழிக்க வேண்டும். அதேபோல க்ஷத்திரியனும் தன் தர்மப்படி, ஸத்யமானதும், நேர்மையான முறைப்படியும் பெறப்பட்ட சுத்தமான பொருளைக் கொண்டு, தன் வாழ்க்கையை நடத்தவேண்டும்.

வணிகன் என்பவன் வட்டிக்குப் பணம் கொடுத்து வாழலாம் என்பது சாஸ்திரங்களில் கூறப்பட்டாலும், வாங்கி, விற்று வியாபாரம் செய்யாமல், வட்டியிலேயே வாழ்வதை சாஸ்திரக்காரர்கள் இகழ்ந்துள்ளார்கள். ஆகையால், பகவான் கீதையில் இதைப் பற்றிக் குறிப்பிடக்கூட இல்லை. இதனால், சோம்பேறித்தனமும் முயற்சியின்மையும் வளர்கின்றன. அடமானமாக நகையையோ, நிலத்தையோ வைத்துப் பணம் வாங்கியவன், அப்பொருட்களின் விலையை விட அதிகமாக வட்டி கட்டினாலும், கடனை முழுமையாகச் செலுத்தாமல் அப்பொருட்களை மீட்க முடிவதில்லை. அதனால், அவன் மனம் எவ்வாறு வருத்தமடைகிறது தெரியுமா! ஆகவே, வட்டியைக் கொண்டு மாத்திரம் வாழும் வாழ்க்கை நிந்திக்கத்தக்கது. இவ்வாறு இகழ்ச்சிக்குரிய வாழ்க்கையில்

பெறும் உணவும் ஸத்யமான உணவாகாது. இதை க்ஷத்திரியர் முதலானோர் உணர்ந்து கொள்ள வேண்டும்.

அறநூல் விதிக்கும் நெறிகளின்படி, அவரவர் வர்ணம், ஆசிரமம் – இவற்றிற்கு ஏற்ற உழைப்பால், நியாயமாக ஈட்டப்பட்ட வருவாயில் கிடைக்கும் உணவு 'உண்மையான உணவு' என்று சொல்லப்படுகிறது. உதாரணமாக, ஒரு வைசியன் பொய், கபடம் – இவற்றைக் கை விட்டு, பகவான் ஆணையால் 'தன் தர்மம்' என்ன என்பதை அறிந்து, வாங்குதல், விற்றல் என்ற வியாபாரத்தை நீதி வழுவாது நடத்தி, அதனால் கிடைத்த சாத்விகப் பொருள்கள் அடங்கிய உணவையே உண்பானாகில், அது 'உண்மையான உணவு' ஆகும். வணிகன் முடிந்த அளவு குறைந்த லாபத்தில் பொருட்களை விற்கவேண்டும். அளவு, எடை, எண்ணிக்கை – இவற்றில் குறைவாகக் கொடுக்கக் கூடாது; அதிகமாகப் பெறக்கூடாது; வட்டி, லாபம், தரகு – இவற்றை நிச்சயித்து, யாருக்கும் குறைவாகக் கொடுக்கக் கூடாது; அதிகமாகவும் பெறக்கூடாது; கொடுக்கல்–வாங்கல் விஷயத்தில் அதிகமாக (வரைமுறைக்கு உட்படாமல்) வாங்க வேண்டாம்; விவரம் அறிந்தவர்களிடமும், அறிவில்லாத பாமரனிடமும் ஒரேவிதமாக நடந்து கொள்ள வேண்டும்.

அனைவரிடமும் ஒரேவிதமாக நடந்து கொள்ளவேண்டும். மேலும் ஒருவன், தன்னிடம் உள்ள செல்வத்தை 'பகவான் அளித்த கொடை' என்று நினைத்து, லாபத்தையும் நஷ்டத்தையும் சமமாகக் கருதி, திறமையுடன் வியாபாரம் செய்ய வேண்டும்.

மூலதனத்திற்கு அழிவு ஏற்படாமலும், முடிந்த வரை பிறருடைய பிழைப்பிற்கு பாதகம் ஏற்படாமலும், இம்சை செய்யாமலும் நியாயமாகப் பொருள் சம்பாதிக்க வேண்டும். எளிமையான வாழ்க்கை நடத்த வேண்டும். எவ்வளவு குறைவான செலவில், தானும் தன் குடும்பமும் வாழ்க்கையை நடத்த முடியுமோ, அவ்வளவு குறைவாகச் செலவு செய்து,

குடும்ப நிர்வாகம் செய்யவேண்டும். செல்வப் பெருக்கம் ஏற்பட்டாலும், அதில் 'தனக்கு உரிமை கிடையாது' என்று எண்ணி, உலகத்தின் நன்மையில் நாட்டம் கொண்டு, உலக நன்மைக்காகவே அதைப் பயன்படுத்துபவனின் வியாபாரம் 'ஸத்ய வியாபாரம்' ஆகும். இத்தகைய வணிகத்தால் பெறப்படும் உணவு வணிகருக்கான 'ஸத்ய ஆகாரம்' ஆகும். இவ்வாறே மற்றவர்களும் அறிந்துகொள்ள வேண்டும்.

## உண்மையான எண்ணமும், உண்மையான நடத்தையும்

'ஸத்' என்ற சொல் பரமேசுவரனுடைய பெயர் என்று முன்பே சொல்லப்பட்டுவிட்டது. அதனால், அதை அடைந்தவனுடைய எண்ணம் ஸத்பாவம் என்றும், நடத்தை ஸத்வியவகாரம் என்றும் சொல்லப்படுகிறது. அவற்றை 'நல்ல எண்ணம்' என்றும் சொல்லலாம். கீதை 13வது அத்தியாயத்தில் 'ஞானம்' என்ற சொல்லாலும், 16வது அத்தியாயத்தில் 'தெய்விக ஸம்பத்' என்ற சொல்லாலும், இவை புகழ் பெற்று விளங்குகின்றன. அவற்றில் நல்ல எண்ணங்களைக் குறிக்கும் சொற்கள் அனைத்தும் 'ஸாதுபாவம்' என்று அறியவேண்டும். எவனிடம் உயர்ந்த எண்ணங்கள் உள்ளனவோ, அவன் பகவானை அடையத் தகுதியுள்ளவன் எனச் சொல்லப் படுகிறான். அவை கடவுளை அடையக் காரணம் ஆவதால், அவை நல்ல எண்ணங்கள் என்று சொல்லப்படுகின்றன.

கௌரவத்தை எதிர்பாராதிருத்தல், பொறுமை (தனக்குத் தீங்கு செய்தவனுக்கும் தீங்கு நினையாதிருத்தல்), மிருதுத்தன்மை, எளிமையாகப் பழகுதல், புனிதத்தன்மை, அமைதி, இனிமை, சமமாகப் பாவித்தல், பற்றற்ற நிலை, சிரத்தை, இரக்கம், உதாரகுணம், நட்பு முதலிய குணங்கள், சகுணமான பகவானிடம் இயற்கையாக உள்ளன. அவ்வாறே பகவானைச் சரணடைந்து, அவரை பூஜிக்கும் பக்தர்களிடமும், அந்த நல்ல குணங்கள் கடவுள் அருளால் வளர்ச்சி

அடைகின்றன. இவ்வித நல்ல எண்ணம் படைத்த பக்தர்களே பகவானைத் தரிசனம் செய்யத் தகுதியுள்ளவர்கள். ஆகவே, நாமும் இம்மாதிரியான நல்ல எண்ணங்களை அடையப் பலவாறும் கடவுளைச் சரணடைய வேண்டும்.

கடவுளருளால் எந்த மனிதனிடம் மேலே குறிப்பிட்ட நல்ல எண்ணங்கள் வந்து விடுகின்றனவோ, அவனுடைய நடத்தையும் ஸத்யமாகிறது. ஏனெனில், நன்னடத்தைக்கு நல்ல குணமே காரணமாகிறது. அந்தரங்க எண்ணம் எவ்வாறு உண்டாகிறதோ, அதற்கு ஏற்பவே அவன் வெளிநடத்தையும் அமைகிறது. அதனால் நல்ல எண்ணத்தால் மோட்சமும், தீய எண்ணத்தால் வீழ்ச்சியும் உண்டாகின்றன. மேலே சொல்லப்பட்ட நல்ல குணமுள்ளவன் மரியாதை, கௌரவம், உபசரிப்பு – இவை எங்கு கிடைக்கக்கூடுமோ, அங்கு முடிந்தவரையில் செல்லமாட்டான். யாராவது ஒருவன் அவனுக்குத் தீங்கு செய்தாலும், 'முற்பிறவியில் நான் செய்த வினையின் பயன் இது' என்று எண்ணி, அவனிடம் பகைமை பாராட்டாதிருப்பான். 'இவன் ஒரு நிமித்த காரணம்' என்று எண்ணி, யாரிடமும் வெறுப்படைய மாட்டான். இவ்வாறு கருதி, சந்தர்ப்பம் கிடைத்தால் நிந்தித்தவனுடைய மனத்திலுள்ள தயக்கம், வருத்தம், அச்சம், வெறுப்பு – இவைகளைப் போக்க முயற்சி செய்வான்.

அவனுக்கு யாராவது கெடுதல் செய்தாலும் அல்லது மறைமுகமாகத் தாக்கினாலும், கடுமையாகப் பேசினாலும், பணிவு–அமைதி–எளிமையுடன் கூடிய இனிமையான சொற்களால் பதிலுரைப்பான். இராமபிரான், கைகேயியிடம் பேசியது போன்று அமைதியாகவே பதிலளிப்பான்.

**ஸுநு ஜநநீ ஸோஇ ஸுது ப$_3$ட$_3$ப$_4$ாகீ ।**
**ஜோ பிது மாது ப$_3$சந அநுராகீ$_3$ ॥**
**தநய மாது பிது தோஷநிஹாரா ।**
**து$_3$ர்லப$_4$ ஜநநி ஸகல ஸம்ஸார ॥**

*முநிக$_3$ந மிலநு பி$_3$ஸேஷி ப$_3$ந*
*ஸப$_3$ஹி ப$_4$ாந்தி ஹித மோர ।*
*தேஹி மஹ(ம்) பிது ஆயஸு*
*ப$_3$ஹுரி ஸம்மத ஜநநி தோர ॥*
*ப$_4$ரது வ்ரா$_3$நப்ரிய பாவஹி(ம்) ராஜூ ।*
*பி$_3$தி$_4$ ஸப$_3$ பி$_3$தி$_4$ மோஹி ஸநமுக$_2$ ஆஜூ ॥*
*ஜௌ(ம்) ந ஜாஉ(ம்) ப$_3$ந ஐஸேஹு காஜா ।*
*ப்ரத$_2$ம க$_3$நிஅ மோஹி மூட$_4$ ஸமாஜா ॥*

இராமபிரான் கூறுகிறார்— "தாயே கைகேயி! எந்த மகன் தன் தாய்–தந்தையருடைய ஆணையை அன்போடு ஏற்கிறானோ, அவனல்லவா பாக்கியசாலி? தாய்–தந்தையரை மகிழ்விக்கின்ற தனயன் உலகில் கிடைத்தற்கரியவன். நான் வனம் செல்வேன்; முனிவர்களைச் சந்திப்பேன். வனம், எனக்கு நன்மையே செய்யக் கூடியது. உங்களுடைய ஒப்புதலோடு, தந்தை இட்டுள்ள ஆணை ஏற்கப்பட வேண்டியது. உயிருக்கு உயிரான என் தம்பி பரதன் அரசு ஆளட்டும். இப்போதுதான் அனுகூலமான சூழ்நிலை உண்டாகியிருக்கிறது. உண்மையில், இவ்வாறு நான் செய்யாமல் இருந்தால், 'அறிவிலிகளில் முதல்வன்' என்று எண்ணப்படுவேன்."

உண்மையில் இத்தகைய நல்ல குணங்களோடு கூடிய மனிதன், இவ்வுலகத்தைப் பரமாத்மாவுடைய வடிவமாகவே காண்கிறான். மனத்திற்குள்ளேயே எல்லோரையும் வணங்கிக் கொண்டு, எல்லோரிடமும் நல்ல முறையில் நடந்து கொள்கிறான். கோஸ்வாமி துளசிதாசர் சொல்கிறார்—

***ஸீய ராமமய ஸப$_3$ ஜக$_3$ ஜாநீ ।***
***கரஉ(ம்) ப்ரநாம ஜோரி ஜுக$_3$ பாநீ ॥***

(உலகம் சீதாராம மயம். அதைக் கைகூப்பி வணங்குகிறேன்.)

இத்தகைய மனிதர்கள், பகைவரிடமும் நண்பரிடமும் சமமாக இருப்பார்கள். பகவான் ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனிடமும்

துரியோதனனிடமும் சமமாகப் பழகியது போல், உரிய சமயம் வாய்க்கும் பொழுது, இவர்களும் சமபாவனையுடன் நடந்து கொள்வார்கள். மகாபாரத யுத்தம் ஆரம்பமாகும் முன்னர், அர்ஜுனனும் துரியோதனனும் பகவான் ஸ்ரீகிருஷ்ணனைச் சந்திக்கச் சென்றனர். அவர்களிடம் கண்ணபிரான் சொன்னார்— ''நீங்கள் இருவரும் என்னைப் பொருத்தவரை சமமானவர்களே. என்னிடம் இருப்பதை இருவரும் உங்கள் விருப்பப்படிப் பங்கிட்டு எடுத்துக் கொள்ளலாம். ஒரு பக்கம் எனது ஓர் அக்ஷௌஹிணீ (நாராயணீ ஸேனை) இருக்கிறது. மற்றொரு பக்கம் நிராயுதபாணியாக நான் மட்டும் இருக்கிறேன். நீங்கள் ஒருவருக்கொருவர் போரிடும் போது, நான் கையில் ஆயுதம் எடுக்க மாட்டேன். இந்த இரண்டில் யார், எதை விரும்புகிறீர்களோ, அதை எடுத்துக் கொள்ளலாம்.'' பகவான் ஸ்ரீகிருஷ்ணன் இப்படிக் கூறியதும், துரியோதனன் படையைப் பெற்றுக் கொண்டான். அர்ஜுனன், பகவான் ஸ்ரீகிருஷ்ணனைப் பெற்றுக் கொண்டான்.

இத்தகைய உயர்ந்த குணங்களைப் பெற்றவர்களைப் புலன்நுகர்ச்சிகள் அசைக்க முடியாதது. யமதர்மராஜன் எவ்வளவுதான் ஆசை காட்டினாலும், நசிகேதனை அசைக்க முடியவில்லை. யமன் எத்தனை ஆடை–ஆபரணங்களையும், ஆரணங்குகளையும் காண்பித்தார், நசிகேதன் மயங்கினானா? நசிகேதன், தேர்கள், குதிரைகள், சுவர்க்க சுகம் முதலியவற்றை அப்போதே நிராகரித்து, 'பரமாத்மா' என்ற செல்வத்தைத்தான் விரும்பினான்.

*ந வித்தேந தர்பணீயோ மநுஷ்ய:*
*லப்ஸ்யாமஹே வித்தமத்$_3$ராக்ஷ்ம சேத்த்வா ।*
*ஜீவிஷ்யாமோ யாவதீ$_3$ஶிஷ்யஸி த்வம்*
*வரஸ்து மே வரணீய: ஸ ஏவ ॥*
*அஜீர்யதாமம்ருதாநாமுபேத்ய*
*ஜீர்யந் மர்த்ய: க்வத$_4$:ஸ்த$_2$: ப்ரஜாநந் ।*

*அபி$_4$த்$_4$யாயந் வர்ணரதிப்ரமோத$_3$ாந்*
*அதிதீ$_3$ர்கே$_4$ ஜீவிதே கோ ரமேத ॥*
*யஸ்மிந்நித$_3$ம் விசிகித்ஸந்தி ம்ருத்யோ*
*யத்ஸாம்பராயே மஹதி ப்$_3$ரூஹி நஸ்தத் ।*
*யோऽயம் வரோ கூ$_3$ட$_4$மநுப்ரவிஷ்ட:*
*நாந்யம் தஸ்மாந்நசிகேதா வ்ருணீதே ॥*
*(கட$_2$ உபநிஷத் 1/1/27–29)*

''பணத்தால் மனிதன் திருப்தி அடைவதில்லை. உங்கள் தரிசனத்தால் எங்களுக்குச் செல்வம் கிடைத்துவிடும். எதுவரை நீங்கள், உமது அருள்மயமான உயிர்களின் மேல் ஆட்சி செய்கிறீர்களோ, அதுவரை நான் உயிர் வாழ முடியும். ஆனால், எனக்கோ அழியாத பரம்பொருளைப் பற்றிய அந்த வரம்தான் வேண்டும். மூப்பும் மரணமும் அற்ற தேவர்களிடம் சென்றடைந்தும், மூப்பும் மரணமும் உடைய தாழ்ந்த மண்ணுலகில் வாழ்கின்ற எந்த மனிதன்தான், அநித்யமான பொருட்களையே விரும்புவான்? வடிவழகு, விளையாட்டு போன்றவற்றில் விளையும் சுகத்தை அநித்யம் என்று அறிந்தும், எந்த மனிதன்தான் நீண்ட ஆயுளைப் பெற்றும் திருப்தியடைவான்? யமதர்மராஜனே! பரலோக சம்பந்தமுள்ள பரமாத்ம தத்துவத்தில் என்ன சந்தேகம் ஏற்படுகிறதோ, அது தீருமாறு அந்த ஆத்ம வித்தையை எனக்குச் சொல்லுங்கள். இந்த ரகசியத்தை விளக்கும் வரத்தைத் தவிர, வேறு ஒன்றும் எனக்கு வேண்டாம்.''

இத்தகையவர்களுக்கு வேதங்கள், சாஸ்திரங்கள் – இவற்றிலும், மகான்களின் வார்த்தைகளிலும் நேரிடையான நம்பிக்கை ஏற்படுகிறது. ஆத்ம க்ஷேமத்தை நாடிய ஸத்யகாமனுக்குத் தம் குருவினுடைய சொற்களில் எவ்வளவு உறுதியான நம்பிக்கை இருந்தது! பிரம்மஞானத்தின் உபதேசத்தைப் பெறுவதற்காக, குரு உத்தாலகருக்குப் பணிவிடை செய்யக் காத்திருந்தார். ஆசார்யர், ஸத்யகாமனுக்குக்

கட்டளையிடுகிறார்— ''இந்த நானூறு பசுக்களையும் காட்டுக்கு ஓட்டிக் கொண்டு போ. எண்ணிக்கை ஆயிரமாக வளர்ந்த பின்னர் திரும்பி வா.'' குருவின் வார்த்தையில் உறுதியான நம்பிக்கை வைத்து, குருவின் அருளால் ஆத்ம ஞானம் பெற்று 'கிருதகிருத்யன்' (உரியதைச் செய்து முடித்தவன்) ஆனார் என்பது, சாந்தோக்ய உபநிஷத் (4/4/95) கதை.

மிகுந்த கடுமையாகவும், இரக்கமில்லாமலும் நடப்பவனிடம் கூட, உயர்ந்த மனிதன் பெருந்தன்மை, இரக்கம், நட்பு – இவை வெளிப்படும் முறையில்தான் பழகுவான். இவ்விஷயத்தில் பக்தர் ஜயதேவ கவியின் சரிதம் குறிப்பிடத்தக்கது.

எவரிடமும் எதனையும் கை நீட்டிப் பெறாத பக்த சிரோமணியான ஜயதேவரை, ஓர் அரசன் அழைத்து மிகவும் மன்றாடி வணங்கிப் பொன்னும் பொருளும் தந்து உபசரித்தான். அரசனின் வேண்டுகோளைத் தவிர்க்க இயலாத ஜயதேவரும், அந்தப் பணக்குவியலை எடுத்துக் கொண்டு வீட்டிற்குச் சென்று கொண்டிருந்தார். நடுவழியில் கொள்ளையர்கள் எதிர்ப்பட்டனர். பேராசை யாரையும் எதைத்தான் செய்யத் தூண்டாது? கொள்ளையர்கள் இரத்தினங்களைக் கவர்ந்து கொண்டனர். அப்பாவியும் ஆசையற்றவருமான ஜயதேவருடைய கைகளையும் வெட்டிவிட்டனர். பணத்தாசை இதோடு நிற்கவில்லை. சிறிதும் இரக்கமின்றி, அவரை ஒரு பாழுங்கிணற்றில் தள்ளிவிட்டுச் சென்று, மேலும் அதிக பாவ மூட்டையைச் சுமந்தனர்.

தற்செயலாகக் காட்டிற்கு வந்த அந்த அரசன், தாகத்தால் பீடிக்கப்பட்டு அக்கிணற்றருகே வந்தான். நீரை இறைப்பதற்காகக் கயிற்றைக் கிணற்றினுள் இறக்கியபோது, உள்ளேயிருந்து ஏற்கனவே அறிமுகமான குரல் கேட்டது. அங்கு துன்பத்தில் சிக்கிக் கொண்டிருந்தவர் ஜயதேவரே அன்றி, வேறு யாருமில்லை என்பதும் அரசனுக்குத் தெரிந்தது.

அவரை வெளியில் கொண்டு வர ஏற்பாடு செய்தான். ஜயதேவரின் கைகள் வெட்டப்பட்டிருந்ததைக் கண்டதும் அரசன் திடுக்கிட்டு, ''என்ன ஆயிற்று? எந்தக் கொடியவன் இச்செயலைச் செய்து, தனக்கே மரணத்திற்கு வழி தேடிக் கொண்டிருக்கிறான்? அவனுக்கு மரண தண்டனை அளிக்கிறேன்'' என்று சொல்லிப் பதறினான். அரசன் பலமுறை வற்புறுத்திக் கேட்டும் ஜயதேவர் பதில் ஏதும் கூறாது வாளாவிருந்தார். அரசனின் முயற்சி ஏதும் பலிக்கவில்லை. ஜயதேவரை அரண்மனைக்கு அழைத்துச் சென்று, இரவு பகலாக அவருக்குப் பணிவிடை செய்து காயத்தைக் குணப்படுத்தினான்.

தற்செயலாக அதே கொள்ளையர்கள் அரண்மனைப் பக்கமாக வருவது தென்பட்டது. அவர்களைக் கண்டதும் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஜயதேவர் அரசனிடம் கூறினார்— ''அரசே! பணம் பெற்றுக் கொள்ளும்படி என்னிடம் பலமுறை வேண்டிக் கொண்டீர்கள். அவ்வாறு கொடுக்கும் விருப்பம் இருந்தால், உங்கள் இஷ்டப்படி மனப்பூர்வமாக, இந்த என் தோழர்களுக்குக் கொடுக்கலாம்.'' ஜயதேவரின் சொற்களைக் கேட்டதுதான் தாமதம், உடனேயே அரசன் அஞ்சி நின்ற அக்கொள்ளையர்களைத் தன்னருகில் அழைத்தான்.

குற்றவாளிகளான அவர்கள் அருகில் வரத் தயங்கினர். அவர்களின் கால்கள் ஒன்றையொன்று பின்னிக் கொண்டன. பின்னர், அவர்கள் தைரியம் பெற்றனர். துணிந்து மனத்தில் தோன்றியபடி கேட்டனர். தாம் செய்த கொடுஞ்செயல்களுக்கு எதிரிடையான பலன் கிட்டுவதைக் கண்டு வியப்படைந்தனர்; மகிழ்ச்சியும் கொண்டனர். அரசனும் மிக்க மகிழ்ச்சியுடனும் மரியாதையுடனும் அவர்களுக்குத் துணையாக தலைமைக் காவலரையும் அனுப்பி வைத்தான்.

இதைக் கண்டு வியந்த காவலாளி ஆவலுடன் அவர்களிடம், ''ஐயா! தங்களுக்கும், பக்த ஜயதேவருக்கும் என்ன தொடர்பு?

எந்தச் செயலுக்கு நன்றி தெரிவிப்பதன் பொருட்டு, அவர் உங்களுக்கு இவ்வளவு செல்வத்தைக் கொடுக்கச் செய்தார்?'' என வினவினான்.

இதைக் கேட்ட கொள்ளையர்கள் கபடமான புன்சிரிப்புடன் பதிலளித்தனர்— ''காவலரே! இந்த ஜயதேவரை நாங்கள் ஒரு சமயம் மரணத்திலிருந்து காப்பாற்றியுள்ளோம். இப்பொழுது அவர், உயிரைக் காப்பாற்றியதற்கான கைம்மாறு செய்து கொண்டிருக்கிறார்.'' கடைசி வார்த்தை வெளிவந்ததுதான் தாமதம். அந்தக் கொள்ளையர்கள் எதிரில் நிலம் அதிர்ந்து பிளந்தது. அந்தக் குழியில் அவர்கள் புதைந்து மாண்டனர். இதைக் கண்ணுற்ற காவலாளி, அரசவைக்குச் சென்று அரசன், ஜயதேவர் ஆகிய இருவர் முன்னிலையிலும் இவ்விஷயத்தைத் தெரிவித்தான்.

இதைக் கேட்டதுமே ஜயதேவரின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகியது. கண்ணீரைத் துடைத்துக் கொள்ளும் பொழுது ஜயதேவரின் இரு கைகளும் வந்துவிட்டன. இதைக் கண்ணுற்ற அரசன் வியப்படைந்து, பல தடவை கேட்ட பிறகு பரமபக்தரான ஜயதேவர் எல்லா நிகழ்ச்சிகளையும் விரிவாகச் சொன்னார். இவை அனைத்தையும் கேட்டவுடன் அரசனுக்கு ஏற்பட்ட ஆச்சரியம் குறைவதற்கு பதிலாக இன்னும் அதிகமாயிற்று. உடனே அரசன், ''உங்களுடைய கைகளை வெட்டியவர்கள் இவர்களே என்றால், எவ்வாறு இவர்கள் தோழர்களாக இருக்கமுடியும்?'' என்று ஜயதேவரிடம் வினவினான்.

***ஜயதேவர் சொன்னார்***— ''நான் பிறரிடமிருந்து எதையும் வாங்குவதில்லை என்ற கொள்கையுடன் இருந்தேன். நீங்கள் என்னைக் கட்டாயப்படுத்தியதால், அக்கொள்கையைக் கைவிட்டதற்குத் தண்டனையாக, அவர்கள் என் கைகளை வெட்டி, எனக்கு அறிவு புகட்டினர். இவ்வாறு தங்களுடைய செயல் மூலம் எனக்கு நன்மை செய்தவர்கள் நண்பர்கள் இல்லை என்றால், பின்னர் யார்?''

*அரசன்—* ''இவர்களுக்கு நிறையப் பணம் அளிக்கும்படி ஏன் சொன்னீர்கள்?''

*ஜயதேவர்—* ''இவர்களுக்கு பணத்தாசை மிக அதிகம். அதனால், இனி ஒருக்காலும் குற்றமற்ற அப்பாவி மக்களை இவர்கள் கொல்லக்கூடாதல்லவா? இதை எண்ணியே அவர்கள் விரும்பிய அளவுக்குப் பணம் கொடுக்கச் செய்தேன். நண்பர்களுக்கு பணம் கொடுக்கச் செய்வது நியாயம்தானே!''

*அரசன்—* ''இவர்களின் மரணத்தைக் கேட்டு ஏன் அழுதீர்கள்?''

*ஜயதேவர்—* ''என் காரணமாகவல்லவா இவர்கள் இறக்கும்படி நேரிட்டது? உலகத்தார் என்னை 'உத்தமன்' என்று அழைக்கின்றனர். உத்தமனுடன் சேர்ந்தால் மேன்மை அல்லவா வரவேண்டும்? ஆனால் நடந்தது, இதற்கு நேர்மாறாக அல்லவா இருக்கிறது? ஆகையால் அழுகிறேன். 'ஆண்டவா! நான் என்ன குற்றம் செய்துவிட்டேன்? என்னுடன் சேர்ந்ததன் விளைவாகத் தானே இவர்களுக்கு விபரீதமான பலன் கிட்டியது.' ''

*அரசன்—* ''உங்களுக்கு மறுபடியும் கைகள் எப்படி வந்தன?''

*ஜயதேவர்—* ''இது கடவுளின் கருணை. அவர் தம் பக்தர்களின் குற்றங்களைக் கவனிக்காமல், தமது அருள் நிலையிலிருந்தே கவனிக்கிறார்.''

பக்த சிரோமணியான ஜயதேவரின் வார்த்தையைக் கேட்டு அரசன் புளகாங்கிதம் அடைந்தான். சந்தோஷத்தில் குரல் தழுதழுத்தது. ஸத்யத்தைக் கடைப்பிடிக்கும் ஜயதேவரின் எண்ணத்தைத்தான் 'ஸத்பாவம்' என்றும், நல்ல எண்ணம் என்றும், நல்ல மனம் என்றும் சொல்கிறோம்.

## ஸத் கர்மம் – நற்செய்கை

பரமபிதவான பரமேசுவரன் 'ஸத்' என்பதால், அவரைக் குறித்துச் செய்யப்படுகிற செயல்கள் எல்லாமே 'ஸத் கர்மம்' (நற்செயல்) ஆகும்.

*யஜ்ஞே தபஸி த$_3$ாநே ச*
*ஸ்தி$_2$தி: ஸதி$_3$தி சோச்யதே ।*
*கர்ம சைவ தத$_3$ர்தீ$_2$யம்*
*ஸதி$_3$த்யேவாபி$_4$தீ$_4$யதே ॥*

*(கீதை 17/27)*

"வேள்வியிலும் தவத்திலும் தானத்திலும் எந்த உறுதிநிலை இருக்கிறதோ, அதுகூட 'ஸத்' என்றே கூறப்படுகிறது. மேலும், பரமாத்மாவின் பொருட்டுச் செய்யப்படுகின்ற அந்தச் செயல் நிச்சயமாக 'ஸத்' என்றே அழைக்கப்படுகிறது."

ஆகையால்தான் மோட்சத்தை அடைய விரும்புகிறவர்களுடைய செயல்கள் எல்லாம் இறைவனுக்கே உரித்தாகின்றன.

***ததி$_3$த்யநபி$_4$ஸந்த$_4$ாய***
***ப$_2$லம் யஜ்ஞதப:க்ரியா: ।***
***த$_3$ாநக்ரியாஃப்ச விவித$_4$ா:***
***க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி$_4$: ॥***

***(கீதை 17/25)***

" 'தத்' என்று அழைக்கப்படுகின்ற பரமாத்மாவுக்கே எல்லாம் உரியது என்ற உணர்வுடன் பயனை விரும்பாமல் பலவிதமான வேள்வி, தவம் ஆகிய செயல்களும், தானமாகிய கர்மங்களும் மோட்சமாகிய நலன் நாடும் நல்லோரால் செய்யப்படுகின்றன."

இவ்வாறு தாங்கள் செய்யும் செயல்களை 'இறைவனுக்காகச் செய்து, செயல்களனைத்தும் இறைவனுக்கே அர்ப்பணம்' செய்யும் மனிதர்கள், புண்ணிய–பாவங்களிலிருந்து விடுபட்டு 'ஸத்' எனப்படும் கடவுளையே அடைகின்றனர். 'கடவுளுக்காக', 'கடவுளுக்கே அர்ப்பணம்' என்ற மனோபாவத்துடன் செய்யப்படும் இருவகைச் செயல்கள் யாவும் மோட்சத்தை அளிக்கின்றன. பகவான் ஸ்ரீகிருஷ்ணன், இம்மாதிரியான கர்மங்களைச் செய்யும்படி அர்ஜுனனுக்கு ஆங்காங்கே

ஆணையிட்டுள்ளார். (கீதை 3/9, 9/27, 12/10,11 முதலிய இடங்களில் காணலாம்.)

ஆகவே யாகம், தானம், தவம், சேவை, பூஜை, உயிர் வாழ்வதற்காகச் செய்யப்படும் தொழில் முதலிய எல்லாச் செயல்களையும் பகவானுக்காகவே செய்ய வேண்டும். ஓர் உண்மையான வேலையாள் எவ்வாறு தான் செய்யும் ஒவ்வொரு செயலையும், தன் யஜமானுடைய விருப்பம், எண்ணம் – இவற்றை அனுசரித்துச் செய்கிறானோ, தான் செய்யும் செயல் அல்லது பணம் முதலியவைகளில் தனக்கு உரிமை இல்லை, யஜமானனுடையவை என்று உணர்ந்து செய்கிறானோ, அந்தச் செயல்களில் தனக்கு அதிகாரம் இல்லை என்ற எண்ணத்துடனும், கனவில்கூட எந்தப் பொருளிலும் ஆசை வைக்காமல், மனசாட்சியின்படி தான் செய்யும் செயல்களே நியாயம் என்று எண்ணி மகிழ்ச்சியோ, துயரமோ இல்லாமல் ஈடுபடுகிறானோ, அவ்வாறே ஒரு பக்தன் பகவானிடம் நடந்து கொள்ள வேண்டும். அவன், தன்னிடம் இருக்கும் பணத்தையும் வசதியையும் சுற்றத்தினரையும் கடவுளுடையவை என்று எண்ணவேண்டும். கடவுளுடைய உத்தரவுப்படி, அவருடைய அக்காரியத்திலேயே அவற்றை ஈடுபடுத்த வேண்டும். எந்த ஒரு புதிய கர்மமும் கிரியையும் பகவானின் கட்டளைக்கிணங்க, அவரது முக மலர்ச்சிக்காகவே அமையும்படி பார்த்து கொள்ள வேண்டும். குரங்காட்டியின் விருப்பம், ஆணை – இவற்றுக்கேற்ப நடந்து கொள்ளும் குரங்கின் நிலைதான், ஒரு நல்ல பக்தனுடையதும் ஆகும்.

‘கடவுளின் விருப்பத்தை எவ்வாறு அறிய முடியும்?’ என்ற கேள்வி இங்கு எழலாம். அதற்கும் பதில் கூற முடியும். ஏதாவது ஒரு செயல் பற்றி ஐயம் தோன்றுமானால், அது விஷயமாகக் கடவுளிடம் கேளுங்கள். பகவான் உங்கள் உள்ளத்தில் குடி கொண்டிருக்கிறார்.

*ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி₃ ஸந்நிவிஷ்டோ*
*மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநம் ச ।*
*வேதை₃ஶ்ச ஸர்வைரஹமேவ வேத்₃யோ*
*வேதா₃ந்தக்ருத்₃வேத₃விதே₃வ சாஹம் ॥*

*(கீதை 15/15)*

''நானே எல்லாப் பிராணிகளுடைய இதயத்திலும் அந்தர்யாமியாக இருந்து கொண்டிருக்கிறேன். என்னிடமிருந்து தான் நினைவும், அறிவும், ஐயம்–திரிபுகளிலிருந்து தெளிவும் ஏற்படுகின்றன. எல்லா வேதங்களாலும் நானே அறியத் தக்கவன். வேதாந்தத்தைச் செய்தவனும், வேதங்களின் உட்பொருளை அறிந்தவனும் நானே.''

ஒரு செயல் செய்யத் தகுந்ததா, தகாததா? என்பதற்கான விடையை, உள்ளத்தில் உறையும் கடவுளிடமிருந்து தெரிந்து கொள்ள விரும்பினால், நிச்சயமாக நீதி வழங்கும் அவன், உங்கள் உள்ளத்தையே 'இதைச் செய். இதைச் செய்யாதே' என்று நல்லபடியாகத் தூண்டிவிடுவார். எப்பொழுது ஒருவன் சொந்த விருப்பு–வெறுப்புகளைச் சாராமல் நல்லுணர்வுடன் அந்தராத்மாவிடம் கேட்கிறானோ, அப்பொழுது அவனுக்குச் சரியான பதில் கிடைக்கத்தான் செய்யும். எடுத்துக்காட்டாக, ஒருவன் தன் அந்தராத்மாவிடம் திருட்டு, விபசாரம் செய்தல், பொய் பேசுதல், கபடமாக நடத்தல் முதலிய செயல்கள் எத்தகையவை? அவற்றைச் செய்யலாமா? என்று கேட்டால், 'இவை தவறானவை, விலக்கத்தக்கவை' என்றே பதில் கிடைக்கும். இதேபோல் பிரம்மசரியம், அகிம்சை, ஸத்யம் முதலியவற்றைச் செய்யலாமா? என்று கேட்டால், 'கட்டாயம் கடைப்பிடிக்க வேண்டும்' என்றே பதில் வரும், அறியாமை, விருப்பு, வெறுப்பு, ஐயப்பாடு முதலிய குற்றங்களால் அந்தராத்மா மறைக்கப்பட்டிருந்தால், சரியான பதில் கிடைக்காது. இத்தகைய தருணத்தில், நீங்கள் சான்றோராகக் கருதும் பெரியவரை அணுகி, அவரிடம் ஐயப்பாடுகளைத்

தெரிவித்து, அவர் கூற்றுப்படி நடந்து கொள்ளவேண்டும். 'சான்றோர் வாக்கு, சர்வேசுவரன் வாக்கு' என்று தீர்மானித்து, அதைப் பின்பற்றிச் செயல்பட வேண்டும்.

ஆகவே, 'ஸத்' வடிவமான கடவுளை அடையக் காரணமாகும் செயல்தான் 'ஸத் வியவகாரம்' அதாவது நல்ல செயல் என்று சொல்லப்படுகிறது. இதையே நன்னடத்தை என்றும் கூறுவர். தமது நலனை விரும்பும் சாதகர்கள், மேற்கூறிய நன்னடத்தையை விசேஷமாகக் கடைப்பிடிக்க வேண்டும். இறைவனை அடைந்த மனிதனுக்கு நன்னடத்தை இயல்பாகவே அமைந்துவிடுகிறது.

நாம், எந்த உயிரினத்திற்கும் எந்தவிதத்திலும் துன்பமோ, பயமோ, வருத்தமோ விளைவிக்கக் கூடாது. அப்படி விளைவிக்காதிருக்க முனைப்பும் நாட்டமும் கொள்ள வேண்டும். ஒருவன் மற்றொருவனுக்குக் கஷ்டத்தை உண்டாக்கினால், அவனுக்கு எந்தவித உதவியும் செய்யக் கூடாது. நாம் அதை ஆமோதிக்கக் கூடாது. மேலும், அதைப் பற்றி மனத்தில் மகிழ்ச்சியும் கொள்ளக்கூடாது.

அறியாமை, விருப்பு, வெறுப்பு ஆகியவை நன்னடத்தையை அழிக்கும் பெரும் விரோதிகள். சாதகன் இதனை உணர்ந்து, இவற்றிடமிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். மதிமயக்கத்தாலும் மதியின்மையாலும், மனிதன் ஏதோவொரு விதமான தீய நடத்தையில் ஈடுபடுகிறான். ஆகையால், நன்னடத்தை உள்ள மனிதன் ஸத்யம், பொய் முதலிய விஷயங்களில் சாஸ்திரத்தின் துணைகொண்டும், சான்றோரின் துணைகொண்டும், தன் அறிவால் 'எது சரி?' என்று உறுதி செய்துகொண்டு உண்மையைக் கடைப்பிடிக்க வேண்டும். இல்லையேல் ஸத்யத்தை அஸத்யமாகவும், கெட்ட நடத்தையை நன்னடத்தையாகவும் கருதிக் கெட்ட நடத்தையில் ஈடுபடுவான். அதனால், அவன் நல்வழியிலிருந்து நழுவிவிடுவது இயற்கையே.

## பற்று

இது சாதகனுக்கு பெரும் பகை. இதுவே காமம், பேராசை என்ற வடிவம் தாங்கி, எல்லா அனர்த்தங்களுக்கும் காரணமாகிறது. இதன் காரணமாகவே, மனிதன் புலன் இச்சைகளுக்கு அடிமையாகி, பொருளை ஈட்டும் ஆசையில் ஈடுபட்டுப் பிறப்பிறப்பில் சிக்கிச் சுழல்கிறான். தன் ஆன்ம முன்னேற்றத்தை விரும்பும் மனிதன், இந்த விஷயத்தில் ஒவ்வொரு அடியிலும் கவனமாக இருக்க வேண்டும். 'நான் எங்கேயாவது சுயநலம் என்ற பிடியில் சிக்கிக் கொண்டு நடத்தை கெட்டவனாக ஆகிவிடுவேனோ?' என்று உன்னிப்பாகக் கவனிக்க வேண்டும்.

பொதுவாக மனிதன் ஒரு செயலில் ஈடுபடத் தொடங்கும்போது, பற்றின் இயல்பான குற்றம் காரணமாக, அந்தச் செயலை நிறைவேறுதல், நிறைவேறாதிருத்தல் ஆகியவற்றில் தன்னலத்தையே நாடி, 'இதனால் எனக்கு என்ன லாபம்?' என்று ஆராய்ந்து, பணத்தாசையால் நல்வழியை விடுத்து, புலனின்பங்களுக்கு அடிமையாகி, அவன் ஆன்மிக நெறியிலிருந்து உடனே நழுவுகிறான்.

ஆகவே, ஆன்மிக மேன்மையை விரும்புபவன், ஒரு செயலைத் துவக்கும் முன்பே, அதில் தன்னலம் புகுந்து விடாமல் விழிப்புடன் இருக்கவேண்டும். அப்படிச் செய்தால், பின்னால் தன்னலத்தை விலக்குவதற்கான தேவை ஏற்படாது. மனத்தில் தன்னலம் புகுந்துவிட்டால் நன்னடத்தையும் கெட்ட நடத்தையாக ஆகிவிடுகிறது. நன்னடத்தையைக் கடைப்பிடிப்பதில் சிறிது குறை ஏற்பட்டாலும் அல்லது ஏதாவது ஓர் அம்சத்தில் கடைப்பிடிக்க முடியாமல் போனாலும், தன்னலமற்ற மனிதன் குற்றவாளியாகக் கருதப்படமாட்டான். குற்றமெல்லாம் தன்னலம் காரணமாகவே ஏற்படுகிறது. தன்னலம் என்பது மிக வலிமை கொண்டது. அது எங்கும் ஒவ்வொரு அடியிலும் பரந்து விரிந்து உள்ளது. மனிதன்,

அதனிடம் கவனமாக இருந்தபோதிலும்கூட, சில நேரங்களில் ஏமாற்றம் ஏற்படும். சுயநலத்திலிருந்து தப்பவும், அதை வேருடன் அழிக்கவும், மனிதன் எப்பொழுதும் எச்சரிக்கையுடன் முயன்று கொண்டே இருக்க வேண்டும்.

உலகில் எல்லாச் செயல்களிலும், எல்லாப் பொருட்களிலும், இந்தத் தன்னலம் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டியுள்ளது. பேரறிவாளிகளான மனிதர்கள்கூட இந்தத் தன்னலம் என்ற சுழலில் சிக்கிக் கொண்டு, கடமைகளை மறந்து விடுகிறார்கள். திரும்பத் திரும்பத் தன் உள்ளத்தின் இயல்புகளை ஊன்றிப் பார்த்து, அதில் தன்னலம் புகாமல் இருக்கிறதா? என்று கவனிக்க வேண்டும். தன்னலத்தை வெற்றி கொள்பவனும், பலதரப்பட்ட ஆசைகளையும், பற்றையும் துறந்து வாழ்பவனும், மிக மேலான அமைதி நிலை எய்துகிறான்!

## வெறுப்பு

விருப்பத்தைப் போலவே வெறுப்பும் மனிதனுக்குப் பெரும் பகையே. இதன் காரணமாக மனிதன், கோபத்திற்கு ஆளாகிக் கடமைகளை மறந்து, விபரீதமாக நடக்கத் தொடங்குகிறான். அதனால், அவனுக்குப் பேரழிவு ஏற்பட்டு விடுகிறது. மனிதர்கள் இதை நினைவில் கொள்ளவேண்டும். வெறுப்பின் மூலகாரணம், உண்மையில் விருப்பம் அல்லது தன்னலப்பற்றே. இந்த விருப்பம் அல்லது பற்றுதல் காரணமாக காமம், கோபம், பேராசை, மயக்கம் முதலிய பயங்கரமான விரோதிகளின் கூட்டமே முளைத்தெழுந்து, நன்னடத்தையிலிருந்து மனிதனை வழுவச் செய்து, அவனுடைய புத்தியைத் தடுமாறச் செய்கிறது. அதனால், மனிதனுடைய பரமலட்சியமான முக்தியை அடையமுடியாமல், இழிந்த நிலையை அடைகிறான். ஆகவே, எல்லாவற்றிற்கும் மூலகாரணமான பற்றுதலை விட்டுவிட மிகுந்த கவனம் செலுத்த வேண்டும்.

பற்றற்ற மனிதனின் ஒவ்வொரு செயலும் தன்னலமற்றதாக இருக்கிறது. இதனால், அவன் செய்யும் ஒவ்வொரு செயலிலும், அன்பும் அருளும் மலர்கின்றன. எப்பொருளிலும் அவனுக்கு ஆசையில்லாமையால் உலகில் அனுபவிக்கத்தக்க எத்தனை பொருட்கள் உள்ளனவோ, அவையெல்லாம் அவன் வசத்தில் வருகின்றன. அவற்றை அவன் பெருந்தன்மையோடு இடம்–பொருள்–ஏவலறிந்து, உலக நன்மைக்காக நல்ல முறையில் செலவு செய்ய முயல்கிறான். இத்தகைய நல்லவர்களுடைய எல்லாச் செயல்களையும் மூடர்களோ, அறிவிலிகளோ புரிந்து கொள்ள மாட்டார்கள். அவர்கள், தாம் செய்யும் அறிவற்ற செயல்களோடு இதை ஒப்பிட்டு, இதில் குற்றத்தைத்தான் காண்பார்கள். ஆனால், இத்தகைய மகாத்மாக்களின் தன்னலமற்ற செயல்களில் சிறிதளவுகூடக் குற்றம் புக முடியாது. நல்லோர் மனத்தில் இகத்திலோ–பரத்திலோ சுகம் வேண்டுமென்ற ஆசையும் இல்லாததால், அறிவிலிகளின் கண்ணோட்டத்தில் குற்றமாகத் தோன்றினாலும், அக்காரியங்கள் குற்றமில்லாப் புனிதச் செயல்களாகவே விளங்கும்.

கௌரவம், புகழ், பெருமை மற்றும் உலகில் உள்ள எந்த நிலையையும் அடையும் பேராசை இல்லாததால், உலக வாழ்வின் எந்த உயர்நிலையும், உலகிலுள்ள எந்தப் பொருளும், இந்தப் பெரியோர்களைக் கவர்ந்திழுக்க முடியாது. எப்பொழுதும் இவர்கள் அச்சமற்ற நிலையிலேயே இருப்பார்கள். எவருக்கும் பயப்பட மாட்டார்கள். எவரிடமும் கடுமையாக நடக்க மாட்டார்கள். பணிவு, மென்மை, ஸத்யம், அமைதி ஆகியவற்றின் கண்கூடான உருவமாகத் திகழ்வார்கள். பொறுமை அவர்களிடம் இயல்பாக அமைந்துவிடுகிறது. ஆகவே, கோபம் என்பது எள்ளளவும் தலைகாட்டாது. சில சமயம் கோபப்படுவது போல் தோன்றினாலும் உண்மையில் அவர்களிடம் கோபமே கிடையாது. எங்கும் எவரிடமும் சமபுத்தி கொண்டவர்களானதால் தகாத நிந்தையோ,

புகழ்ச்சியோ, அவர்கள் செய்யமாட்டார்கள். அவர்களிடம் பொய், கபடம் முதலிய குறைகள் இருக்கவே முடியாது. ஏதாவதொரு விஷயம் வெளிப்பட்டால், பிறருக்குத் தீங்கோ, தனக்குப் புகழோ ஏற்படும் என்றாலும், அதை அவர்கள் வெளியிட மாட்டார்கள். இதனால் கபடம், பொய் அல்லது திருட்டு அவர்களிடம் இருப்பதாக எண்ணக்கூடாது.

## முடிவுரை

'ஸத்யம்' என்ற விஷயம் மிகவும் பரந்தது. இதைப் பற்றி மிக அதிகமாகச் சொல்லியாகிவிட்டது. ஆயினும், மனத்தில் உள்ள எல்லா விஷயங்களையும் சொல்லிவிட்டோம் என்றும் கூறுவதற்கில்லை. இதை இன்னும் விளக்கமாக உரைக்க வேண்டிய அவசியம் உள்ளது. ஆயினும், கட்டுரை மிகவும் வளர்ந்து விடும் என்ற காரணத்தால் சுருக்கமாகக் கூறி முடிக்கிறேன். ஸத்யம் என்ற ஒன்றை மட்டுமே கடைப்பிடிப்பவனை, பல உயர்ந்த குணங்கள் தாமாகவே வந்தடைகின்றன. ஸத்யத்திற்கு உறைவிடமாகத் திகழும் மனிதன் நற்குணக் கடலாகவும், ஞானக் குவியலாகவும் ஆகிறான். ஆனால், ஸத்யத்தைக் கடைப்பிடிக்கும்போது ஆரம்ப நிலையில் பலவிதத் துயரங்கள், இடர்ப்பாடுகள், ஏற்படக் கூடும். அவற்றை எதிர் நீச்சல் போட்டுச் சமாளிக்க வேண்டியிருக்கும். ஆனால், ஸத்யம் நிலைபெற்ற பின்னர் துயரம், மதிமயக்கம் என்பன முற்றிலும் விலகி விடுகின்றன. ஆகவே, ஸத்யத்தைக் கடைப்பிடிப்பவன் பயமின்றித் தன் லட்சியங்களை அடைய நிலையான முயற்சியைச் செய்து கொண்டே இருக்க வேண்டும். ஒரு தட்டில் ஸத்யத்தைத் துறப்பது, மற்றதில் (ஸத்யத்திற்காக) உயிரைத் துறப்பது என்ற இரு பொருட்களையும் தராசில் நிறுப்போமானால், ஸத்யத்திற்காக உயிரைத் துறப்பது என்ற தட்டுதான் பாரமுள்ளதாய் இருக்கும். ஆகவே மனிதன், தன் உயிரைக்கூடப் பொருட்படுத்தாமல் ஸத்யத்தில் உறுதியாக நிற்க வேண்டும். அப்பொழுது பற்பல

ஆபத்துக்கள் வந்தாலும், அவை தாமாகவே பறந்து போகும். கடைசியில் ஸத்யமே வெல்லும்!

இதற்குச் சான்றாக, பக்தன் பிரகலாதனின் புகழ் பெற்ற சரிதத்தைக் கூறலாம். ஸத்யத்திற்குச் சான்று தேவை இல்லை. அது தனக்குத் தானே பிரமாணம். ஏனைய பிரமாணங்கள் அனைத்தும் ஸத்யத்தையே அண்டி நிற்கின்றன. ஸத்யத்தின் விரோதிகள், அதை அழிப்பதற்கு எவ்வளவுதான் முயன்றாலும், ஸத்யத்திற்கு எவ்விதத் தீங்கும் ஏற்படாது. ஸத்யத்தை எவ்வளவு உரசிப் பார்த்தாலும், சோதனை செய்தாலும், அதன் ஒளியில் குறைவு ஏற்படாமல் பிரகாசித்துக் கொண்டிருக்கும். வன்முறையாலோ, அநீதியாலோ, குறைபாடு தோன்றினால், அது ஸத்யமே இல்லை. ஸத்யத்தின் மகிமையைச் சிறிதளவேனும் தெரிந்து கொண்டுவிட்டவன், ஸத்யத்தை விட்டுவிடவே முடியாது. அவ்வாறு இருக்கும் பொழுது தத்துவத்தை, ஸத்யத்தை நன்கு அறிந்தவன், அதிலிருந்து எப்படிப் பிறழ முடியும்?

மேலும், மனிதன் ஸத்யம் ஒன்றின் உட்பொருளை மட்டும் தெரிந்து கொண்டுவிட்டால், எல்லாத் தத்துவங்களின் உண்மையையும் அறிந்தவனாக ஆகிவிடுகிறான். ஏனென்றால், ஸத்யம் பரமாத்மாவின் ஸ்வரூபம். பரமாத்மாவை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்ததற்கு சமம் என்பது அனைவரும் அறிந்த உண்மையல்லவா? ஆகவே, மனிதன் மனம், வாக்கு, புலன்கள் மூலமாக ஸத்யத்தைச் சரணடைய வேண்டும். ஸத்யம் உலகம் முழுவதும் நிறைந்துள்ளது! ஆராயுங்கால் எங்கும் எதிலும் ஸத்யம் ஊடுருவி, உள்ளதை அனுபவ பூர்வமாகக் காணலாம்.

கண்களுக்குத் தோற்றம் தரும் பொருட்களை எல்லாம் ஆராய்ந்தால், அவையெல்லாம் மறைந்து, அதாவது வெளித் தோற்றம் மறைந்து, ஸத்யம் மட்டுமே எஞ்சி நிற்கும். உலகம் முழுவதின் 'இருப்பு' என்பது 'ஸத்யத்தை அடிப்படையாகக்

கொண்டுள்ளது. ஆதாரமான ஸத்யமில்லையேல் உலகமே இராது. ஸத்யம் இல்லாமல் எந்தப் பொருளும் நிலைபெற முடியாது. இதற்குமாறான எண்ணம் மதிமயக்கமே ஆகும். அது நிலைக்காது. மழை பொழிந்தால் மண் வீடு கரைந்து விடுவதுபோல், ஆராய்ந்து பார்க்கும் காலத்து பொய்மையின் இருப்பும் விரைவிலேயே அழிந்துவிடும். மண் வீட்டின் சுவர்கள் விழுந்தால் மண்ணாவது மீதியிருக்கும். ஆனால், பொய்யை அடிப்படையாகக் கொண்ட பொருள் அழிந்தால், எதுவுமே எஞ்சி நிற்காது. அதன் பெயர் இருந்த அடையாளம்கூட இருக்காது. பொய்யை எத்தனை உபாயங்களின் மூலம் மெய் என்று நிலைநிறுத்த முயன்றாலும், அதை மெய்யாக்க முடியாது; பொய் பொய்யாகவேதான் இருக்கும். பொய்க்கு நிலையே கிடையாது. ஆகவே, ஸத்யத்தை அழிக்க, எவரேனும் முயற்சி செய்தாலும், அது வீணாகிவிடும். ஸத்யம் அழியாது பிரகாசித்துக் கொண்டே இருக்கும்! இத்தகைய அழிவற்ற, அழிக்கவொண்ணாத ஸத்யத்தை விட்டு, அஸத்யத்தைக் கடைப்பிடிக்கும் மூடன் இரக்கத்திற்குரியவனாகிறான். ஆதலால், நன்மையை விரும்பும் மானிடர்கள், ஸத்யத்தைத் தம் உயிரைவிட உயர்வாக மதிக்க வேண்டும்; ஸத்யத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்; முனைப்புடன் நின்று ஸத்யத்தைக் காப்பதற்கு முயல வேண்டும். ஸத்யமே வெல்லும்!

**ஸத்யமேவ ஜயதே!**

**॥ ஓம் தத் ஸத் ॥**



|| ஓம் ஸ்ரீபரமாத்மநே நம: ||

# ஸ்ரீமத் பகவத்கீதை

## ஸ்ரீஜயதயால் கோயந்தகா (நிறுவனர் – கீதா பிரஸ்) அவர்களின் 'தத்துவவிவேசனீ' எனும் நூலிலிருந்து

## (இரண்டாவது அத்தியாயம் – ஸாங்க்ய யோகம்)

*பார்த்தா! இந்த புத்தி உனக்கு ஞானயோக விஷயத்தில் கூறப்பட்டது. இனி, இதனைக் கர்மயோக விஷயத்தில் கேள். அந்த புத்தியோடு கூடியவனாக ஆகி, கர்மபந்தத்தை முழுமையாக விலக்கிவிடுவாய்; அதாவது, முற்றிலும் அழித்துவிடுவாய். (39)*

*இந்தக் கர்மயோகத்தில் ஆரம்பம் அதாவது விதை அழிவது என்பது இல்லை; நேரெதிரான விளைவும் இல்லை. இந்தக் கர்மயோகம் என்கிற தர்மத்தைச் சிறிதளவு கைக்கொள்வதும்கூட பெரியதான பிறப்பு, இறப்பு என்ற பயத்திலிருந்து காப்பாற்றுகிறது. (40)*

*அர்ஜுனா! இந்தக் கர்மயோகத்தில் தீர்மானமான புத்தி ஒன்றுதான் இருக்கிறது. ஆனால், ஒரு விஷயத்திலும் நிச்சயபுத்தி இல்லாத, விவேகமற்ற, பயனில் ஆசையுள்ள மனிதர்களுடைய புத்திகள் நிச்சயமாக பல நோக்கங்கள் உடையனவாகவும் முடிவற்றவையாகவும் இருக்கின்றன. (41)*

*அர்ஜுனா! போகங்களில் மூழ்கியவர்களும், சுவர்க்கமே மேலானது என்று நினைப்பவர்களும், கர்மங்களின் பயன்களைப் புகழ்ந்துரைக்கும் வேதவாக்கியங்களிலேயே பிரியம் வைத்து வேறொன்றும் இல்லை என்று வாதம் செய்கின்றவர்களுமான அறிவிலிகள், கர்மங்களின் பயனான பிறவியை அளிக்கின்ற போகங்கள் மற்றும் செல்வங்கள் பெறுவதற்குரிய பலவகையான கர்மங்களைக் கூறுகின்ற மலர்போலக் கவர்ச்சியுள்ள எந்தப் பேச்சை எடுத்துப் பேசுகிறார்களோ, அந்தப் பேச்சினால் மனம் அபகரிக்கப்பட்டு போகத்திலும் செல்வத்திலும் மிகுந்த பற்றுள்ளவர்களுக்கு பரமாத்மாவிடம் நிச்சயமான கருத்துள்ள புத்தி நிலைபெற்றிருப்பதில்லை. (42–44)*

அர்ஜுனா! மேலே கூறியபடி வேதங்கள் முக்குணங்களின் செயல்களான போகங்களையும், அவற்றின் சாதனை முறைகளையும் பற்றிக் கூறுபவை. ஆகவே, நீ அந்த போகங்களிலும் அவற்றின் சாதனங்களிலும் பற்று கொள்ளாதவனாக, மகிழ்ச்சி–துயரம் முதலிய இரட்டைகளுக்கு ஆட்படாதவனாக, நித்தியப் பொருளான பரமாத்மாவிடம் நிலைபெற்று யோகக்ஷேமத்தை – பொருள் சேர்ப்பது, காப்பது என்பதை – விரும்பாதவனாக, தனக்கு வசப்பட்ட மனமுடையவனாக ஆகக்கடவாய். *(45)*

எல்லாப் புறங்களிலும் நிறைந்த நீர்நிலையை அடைந்த பிறகு, சிறிய நீர்நிலையினால் மனிதனுக்கு எவ்வளவு பயன் இருக்கிறதோ, பிரம்மத்தைத் தத்துவரீதியாக அறிந்த பிராமணனுக்கு அனைத்து வேதங்களினாலும் அவ்வளவு பயன்தான் கிடைக்கும். (பெரிய நீர்நிலையை அடைந்தவனுக்குக் கிணறு, குளம் போன்ற சிறிய நீர்நிலைகள் தேவையற்றுப் போவதுபோல் பிரம்மானந்தத்தைப் பெற்ற பிறகு, ஆனந்தத்தைப் பெறுவதற்காக வேதங்கள் தேவைப்படுவதில்லை.) *(46)*

உனக்குக் கர்மங்களை ஆற்றுவதில்தான் பொறுப்பு உண்டு. அவற்றின் பயன்களில் ஒருக்காலும் உரிமையில்லை. ஆகவே, நீ கர்மங்களின் பயன்களைக் கோருவதற்குக் காரணமாக ஆகாதே. மேலும், உனக்குக் கர்மங்களை ஆற்றாமல் இருப்பதிலும் பற்று இருக்கக்கூடாது. *(47)*

அர்ஜுனா! பற்றினைத் துறந்து மேலும் கைகூடுவது, கைகூடாமலிருப்பது என்பதில் சமநோக்குடையவனாக இருந்து, யோகத்தில் நிலைபெற்றுச் செய்யவேண்டிய கர்மங்களைச் செய். சமபாவனைதான் யோகம் என்று கூறப்படுகிறது. *(48)*

இந்தச் சமபாவனையான புத்தியோகத்தைக் காட்டிலும் பயன் கருதிச் செய்யப்படும் கர்மம் மிகவும் தாழ்ந்த ரகத்தைச் சேர்ந்தது. ஆகவே, அர்ஜுனா! சமபுத்தியில் தஞ்சமடைவாய். ஏனெனில், பலனுக்குத் தம்மைக் காரணமாக்கிக் கொள்கிறவர் இரக்கத்துக்குரியவராவர். *(49)*

சமபுத்தியுடையவன், புண்ணியம், பாவம் என்ற இரண்டையும் இவ்வுலகிலேயே விட்டுவிடுகிறான். அதாவது, அவற்றிலிருந்து விடுபடுகிறான். இதனால், நீ சமத்துவ யோகத்தில் ஈடுபட்டிரு. இந்தச் சமத்துவரூப யோகம்தான் கடமையை ஆற்றுவதில் திறமையாகும் – கர்மபந்தத்திலிருந்து விடுபடுவதற்கு உபாயமாகும். *(50)*

ஏனெனில், சமபுத்தியுடைய ஞானிகள் கர்மத்தினால் உண்டாகும் பயனைத் தியாகம் செய்து, பிறப்பு என்ற பந்தத்திலிருந்து விடுபட்டு, மாறுதல்களற்ற பரமபதத்தை அடைகிறார்கள். *(51)*

எப்பொழுது உன்னுடைய புத்தியானது மோகம் என்ற சேற்றை முற்றிலுமாகக் கடந்து விடுகிறதோ, அப்பொழுது நீ கேட்டது பற்றியும், கேட்கப்படுகிறவை பற்றியும், இவ்வுலக–பரலோகங்களில் ஏற்படும் அனைத்துப் போகங்களிலிருந்தும் வைராக்கியத்தை அடைவாய். *(52)*

பற்பல வசனங்களைக் கேட்டுச் சஞ்சலமாகியுள்ள உன்னுடைய புத்தி, எப்பொழுது பரமாத்மாவிடம் அசையாமல் மேலும் திடமாக நிலைபெறுகிறதோ, அப்பொழுது யோகத்தை அடைவாய் – நீ பரமாத்மாவிடம் நிரந்தரமாக ஒன்றிவிடுவாய்.'' *(53)*

**அர்ஜுனன் கேட்கிறார்—** ''கேசவா! சமாதியில் நிலை பெற்றுப் பரமாத்மாவை அடைந்த ஸ்திரபுத்தி உள்ளவனின் இலக்கணம் என்ன? இந்த ஸ்திரபுத்தியுள்ள புருஷன் எப்படிப் பேசுவான்? எப்படி உட்காருவான்? மேலும் எப்படி நடப்பான்?'' *(54)*

**ஸ்ரீபகவான் கூறுகிறார்—** ''அர்ஜுனா! எப்பொழுது **இந்த மனிதன் மனத்திலுள்ள எல்லா ஆசைகளையும் அறவே துறக்கிறானோ, மேலும் ஆத்மாவினால் ஆத்மாவிடமே ஆனந்தமாக இருக்கிறானோ, அப்பொழுது அவன் ஸ்திதப்ரக்ஞன் என்று கூறப்படுகிறான்.** *(55)*

துன்பங்கள் நேர்கையில் எவனுடைய மனம் கலங்குவது இல்லையோ, சுகங்களை அடையும்போது அவற்றில் சிறிதுகூட ஆசை கொள்வதில்லையோ, எவனுக்கு விருப்பு, பயம், கோபம் ஆகிய இவை முற்றும் அற்றுப்போயினவோ, அத்தகைய முனிவன் ஸ்திதப்ரக்ஞன் என்று கூறப்படுகிறான். (56)

எவனொருவன் அனைத்திலும் பாசம் வைக்காமல், அந்தந்த நல்ல அல்லது கெட்ட பொருளை அடைந்து மகிழ்வதும் இல்லையோ, வெறுப்பதுமில்லையோ, அவனுடைய புத்தி ஸ்திரமானது. (57)

ஆமை, எல்லாப் பக்கங்களிலிருந்தும் தனது உறுப்புக்களை உள்ளிழுத்துக் கொள்வதுபோல, எப்போது இந்த மனிதன் புலன்நுகர்ப் பொருட்களிலிருந்து புலன்களை முற்றிலும் இழுத்துக் கொள்கிறானோ, அப்போது அவனுடைய புத்தி ஸ்திரமானது என்று புரிந்துகொள்ள வேண்டும். (58)

புலன்களின் மூலம் போகப் பொருட்களை ஏற்றுக் கொள்ளாத மனிதனுடைய புலன்நுகர் பொருட்கள் மட்டுமே விலகுகின்றன. ஆனால், அவற்றில் தங்கியுள்ள பற்று விலகுவதில்லை. இந்த ஸ்திதப்ரக்ஞனுக்கோ பரமாத்மாவைத் தரிசித்தப் பிறகு, அப்பற்றும் விலகிவிடுகிறது. (59)

அர்ஜுனா! பற்று அழியாததால் கலக்குபவையான புலன்கள் முயற்சியுள்ள புத்திசாலியான மனிதனின் மனத்தைக் கூட பலவந்தமாக இழுத்துச் சென்று விடுகின்றன. (60)

அந்த அனைத்துப் புலன்களையும் வசப்படுத்தி ஒருமுகப் படுத்திய சித்தமுடையவன் என்னையே பரமகதியாகக் கொண்டு தியானத்தில் அமர வேண்டும். ஏனெனில், எவனுடைய புலன்கள் வசப்பட்டு இருக்கின்றனவோ, அவனுடைய புத்தி ஸ்திரமாகிறது. (61)

புலன்நுகர்ப் பொருட்களைச் சிந்தித்துக் கொண்டிருக்கின்ற மனிதனுக்கு, அவ்விஷயங்களில் பற்று ஏற்படுகிறது; பற்றிலிருந்து

ஆசை உண்டாகிறது; ஆசையிலிருந்து (ஆசைக்கு இடையூறு வருவதனால்) கோபம் உண்டாகிறது. (62)

கோபத்தினால் மிகுந்த அறிவின்மை ஏற்படும்; அறிவின்மையால் நினைவு தடுமாற்றம் உண்டாகிறது; நினைவு தடுமாறுவதனால் புத்தி அதாவது விவேகத்தின் அழிவு உண்டாகிறது; விவேகம் அழிவதனால் மனிதன் தன் நிலையிலிருந்து வீழ்ச்சி அடைகிறான். (63)

ஆனால், தன்வசப்பட்ட மனத்துடைய சாதகன் விருப்பு-வெறுப்புகளின்றித் தன்னால் வசப்படுத்தப்பட்ட புலன்கள் மூலம் போக விஷயங்களில் சஞ்சரித்துக் கொண்டு உள்ளத்தெளிவை அடைகிறான். (64)

உள்ளத்தெளிவு ஏற்பட்டுவிட்டால், இவனுடைய எல்லா துக்கங்களுக்கும் அழிவு ஏற்பட்டுவிடும். தெளிவடைந்த மனமுள்ள கர்மயோகியின் புத்தி, விரைவிலேயே எல்லா விஷயங்களிலிருந்தும் விலகிப் பரமாத்மா ஒன்றிலேயே நன்கு ஸ்திரமாகிவிடுகிறது. (65)

மனத்தையும் புலன்களையும் வெற்றி கொள்ளாதவனுக்கு நிச்சயமான புத்தி இருக்காது. உறுதியான புத்தியற்றவனுக்கு மனத்தில் பாவனையும் தோன்றாது. அவ்வாறே, பாவனை அற்றவனுக்கு அமைதியும் கிடைக்காது. அமைதியற்றவனுக்குச் சுகம் ஏது? (66)

ஏனெனில், நீரில் போய்க் கொண்டிருக்கும் ஓடத்தைக் காற்று அடித்துக் கொண்டு போவதுபோல, போகங்களில் சஞ்சரிக்கின்ற புலன்களில் எந்த ஒரு புலனுடன் மனம் ஒட்டியிருக்கிறதோ, அந்த ஒரே புலன் மனம் வசப்படாத இந்த மனிதனின் புத்தியைக் கவர்ந்து செல்கிறது. (67)

ஆகையால், நீண்ட புஜங்கள் உடையவனே! (அர்ஜுனா!) எந்த மனிதனுடைய புலன்கள் புலன்களுக்குரிய போகப் பொருட்களிலிருந்து எல்லாவிதங்களிலும் மீட்கப்பட்டு விட்டனவோ, அவனுடைய புத்தி ஸ்திரமானது. (68)

அனைத்து உயிரினங்களுக்கும் எது இரவுபோல இருக்கிறதோ, அந்த நித்தியமான, ஞானவடிவான பரமானந்தத்தை அடைவதில் ஸ்திதப்ரக்ஞனான யோகி விழித்திருக்கிறான். மேலும், எதில் அழியும் தன்மையுடைய உலகியல் இன்பங்களை அடைவதில் அனைத்து உயிரினங்களும் விழித்திருக்கின்றனவோ, பரமாத்மாவின் தத்துவத்தை உணர்கின்ற முனிவருக்கு, அது இரவுபோல ஆகின்றது. *(69)*

எவ்விதம் எல்லாப் பக்கங்களிலிருந்தும் நீர் நிறைந்தும் அசைவில்லாமல் இருக்கும் கடலில், பல ஆறுகள் அதைக் கலங்கச் செய்யாமலேயே கலந்து விடுகின்றனவோ, அதேபோல ஸ்திதப்ரக்ஞனான மனிதனை அனைத்து போகங்களும் எவ்வித மாறுதலும் உண்டுபண்ணாமலேயே வந்து அடைகின்றன. அவனே மேலான அமைதியை அடைகிறான். போகங்களை விரும்புபவன் அமைதியை அடைவதில்லை. *(70)*

எந்த மனிதன் அனைத்து விருப்பங்களையும் துறந்துவிட்டு மமதை இல்லாதவனாக, அகங்காரமற்றவனாக, சிறிதளவு ஆசையும் இல்லாதவனாக சஞ்சரிக்கிறானோ, அவனே அமைதியை அடைகிறான். அதாவது, அவனே சாந்தியைப் பெறுகிறான். *(71)*

அர்ஜுனா! இதுதான் பிரம்மத்தை அடைந்தவனின் நிலை. இதை அடைந்தபின் யோகி ஒருபோதும் மோகம் அடைவதில்லை. மேலும், உயிர் பிரியும் நேரத்திலும் இந்தப் பிரம்மநிலையிலேயே நிலைபெற்றுப் பிரம்மானந்தத்தை அடைகிறான்.'' *(72)*



॥ ஸ்ரீஹரி: ॥

# கீதா பிரஸ்ஸின் வெளியீடுகள்

## பாராயண நூல்கள்

Code No.

1. 743 ஸ்ரீமத் பகவத்கீதா மூலம் [சம்ஸ்கிருதம் –தமிழ்]
2. 793 ஸ்ரீமத் பகவத்கீதா [தமிழ் மூலம்] & விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் [தமிழ் மூலம்]
3. 795 ஸ்ரீமத் பகவத்கீதா – பொழிப்புரை
4. 1918 ஸ்ரீமத் பகவத்கீதை [மூலம் –பொழிப்புரை] [கையடக்கப் பிரதி]
5. 823 ஸ்ரீமத் பகவத்கீதா [மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] – பதவுரை–பொழிப்புரை]
6. 800 ஸ்ரீமத் பகவத்கீதா–தத்துவவிவேசனீ [மூலம் [சம்ஸ்கிருதம்–தமிழ்] – பதவுரை–பொழிப்புரை–விளக்கவுரை]
7. 389 கீதா மாதுர்யம் [ஸ்ரீமத் பகவத்கீதா – வினா-விடை]
8. 1426 ஸ்ரீமத் பகவத்கீதா – ஸாதக ஸஞ்ஜீவனீ [மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] – பதவுரை – விளக்கவுரை] [1 முதல் 9 அத்தியாயங்கள்]
9. 1427 [10 முதல் 18 அத்தியாயங்கள்]
10. 600 ஸ்ரீஹநுமாந் சாலீஸா [கையடக்கப் பிரதி] [தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு]
11. அச்சில் ஸ்ரீஹநுமாந் சாலீஸா (Small Size)
12. 794 விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் [தமிழ் மூலம்]
13. 1256 அத்யாத்ம ராமாயணம் [தமிழ் மொழிபெயர்ப்பு]
14. 1606 ஸ்ரீமந் நாராயணீயம் [தமிழ் மூலம் – விளக்கவுரை]
15. 1904 சுந்தர காண்டம் [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்] [தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு]
16. 1618 சுந்தர காண்டம் [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்] – பொழிப்புரை
17. 1890 கம்ப ராமாயணம் – சுந்தர காண்டம் [பாடல்கள்]
18. 1788 ஸ்ரீ முருகன் துதிமாலை [தோத்திரத் தொகுப்பு]
19. 1789 திருப்பாவை விளக்கம்
20. 1912 விரத கல்ப த்ரயம்

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

[ தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு ]

21. 1902 முதல் பாகம் [பால–அயோத்தியா காண்டம்]
22. 1903 இரண்டாவது பாகம் [ஆரண்ய–கிஷ்கிந்தா ]
23. 1904 மூன்றாவது பாகம் [சுந்தர காண்டம்]
24. 1905 நான்காவது பாகம் [யுத்த காண்டம்]
25. 1906 ஐந்தாவது பாகம் [உத்தர காண்டம்]

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

[ தமிழ் மொழிபெயர்ப்பு ]

26. அச்சில் முதல் பாகம் [பால–கிஷ்கிந்தா காண்டம்]
27. ,, இரண்டாவது பாகம் [சுந்தர–உத்தர காண்டம்]

## ஸ்ரீமத் பாகவத மகாபுராணம்

[ தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு ]

28. அச்சில் முதல் பாகம் [1 முதல் 4வது ஸ்கந்தம் வரை]
29. ,, 2வது பாகம் [5 முதல் 9வது ஸ்கந்தம் வரை]
30. ,, 3வது பாகம் [10 முதல் 12வது ஸ்கந்தம் வரை]

## அறிவுரை நல்கும் நூல்கள்

31. 127 பயனுள்ள கதைகள்
32. 365 பசுப் பராமரிப்பின் நற்பயன்கள் – கதைகள்
33. 423 கர்ம ரஹஸ்யம்
34. 466 சத்ஸங்கத்தின் சாரமான தத்துவங்கள்
35. 499 நாரத பக்தி ஸூத்ரம்
36. 536 கீதை கற்பதன் பயன்கள்
37. 550 திருநாம ஜபத்தின் மகிமை
38. 551 தூய்மையான உணவுப் பழக்கம்
39. 553 குடும்பத்தில் எப்படி இருக்க வேண்டும்?
40. 568 சரணாகதி
41. 569 உருவ வழிபாடு
42. 591 பிள்ளைகளின் கடமைகள்
43. 601 பகவான் ஸ்ரீகிருஷ்ணன்
44. 606 மிக உயர்ந்த நிலையை அடைவதற்கான வழி
45. 607 எல்லோருக்கும் மேன்மை எப்படி ஏற்படும்?

எங்களது நிறுவனம் ஆன்மீகம் மற்றும் மானிட நல்லொழுக்கம் வளர உதவும் நூல்களை, அனைத்து இந்திய மொழிகளிலும் பல ஆண்டுகளாக வெளியிடுகிறோம் என்பதை மிக்கப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

**எங்களது தமிழ்நாடு கிளை :**

கீதா பிரஸ் புத்தக நிலையம், கீதா பிரஸ் மேன்ஷன்,
**8/1 M**, ரேஸ் கோர்ஸ் சாலை,
(தாமஸ் பார்க் பஸ்—ஸ்டாப் அருகில்), கோவை – **641 018.**
**Ph. : 0422–3202521, Mobile : 9362202521**

|| Shri Hari ||

## Some of Our English Publications

| Code No. | |
|---|---|
| 452 } 453 } | **Shrimad Valmiki-Ramayana** [With Sanskrit Text and English Translation] Set of two volumes |
| 455 | **Shrimad Bhagavadgita** [Sanskrit Text and English Translation] Pocket Size |
| 456 | **Shri Ramacharitamanasa** [With Hindi Text and English Translation] |
| 457 | **Shrimad Bhagavadgita – Tattvavivechani** With Sanskrit text, Translation and Deatiled Commentary [By Jayadayal Goyandka] |
| 487 | **Gita Madhurya** |
| 534 | **Shrimad Bhagavadgita** [Sanskrit Text and English Translation] [Hard Bound Edition] Pocket Size |
| 564 } 565 } | **Shrimad Bhagavata Mahapuranam** [With Sanskrit Text and English Translation] Set of two volumes |
| 786 | **Shri Ramacharitamanasa** (Medium Size] |
| 824 | **Songs from Bhartrhari** |
| 1080 } 1081 } | **Shrimad Bhagavadgita – Sadhaka Sanjivani** [With Sanskrit text, Transliteration, Translation and Detailed Commentary] Set of two volumes [By Swami Ramsukhdas] |
| 1159 } 1160 } | **Shrimad Bhagavata Mahapuranam** [English Translation only] Set of two volumes |
| 1318 | **Shri Ramacharitamanasa** [With Hindi Text Transliteration, Roman Transliteration and English Translation] |
| 1406 | **Gita Madhurya** |
| 1411 | **Shrimad Bhagavadgita** – Roman Gita [Sanskrit Text, Transliteration and English Translation] Book Size |
| 1528 | **Hanuman Chalisa** (Roman) (Pocket Size) |
| 1550 | **Shri Ramacharitamanasa – Sundara Kanda** (Roman) |
| 1584 | **Shrimad Bhagavadgita** – Roman Gita [Sanskrit Text, Transliteration and English Translation] Pocket Size |
| 1617 | **Shri Ramacharitamanasa** [A Romanized Edition with English Translation] |
| 1638 | **Sri Hanuman Chalisa** |
| 1643 | **Ramaraksastotram** |
| 1658 | **Shrimad Bhagavadgita** – Roman Gita [Sanskrit Text, Transliteration and English Translation] |

